# அருவியூர் நகரத்தார் குரல்

திங்கள் இரண்டுக்கு ஒன்று

கல்வி பண்பாடு வளர்ச்சி இதழ்

ஆண்டு 25 - 155
பிலவ - ஐப்பசி

நவம்பர் 2021


## முதலாம் ஆண்டு நினைவுநாள் அஞ்சலி



தோற்றம்
22.07.1955

மறைவு
08.10.2020

## தெய்வத்திரு மு.கு. பாண்டியன் செட்டியார்

பொன்னமராவதி (பூர்வீகம்: சொக்கம்பட்டி)

என்றும் உங்கள் நினைவில் வாழும் மனைவி : திருமதி. பா. சந்திரா ஆச்சி

மகன்கள்: பா. மோகன் B.E., - மோ. சிவரஞ்சனி M.Sc., B.Ed.,

செல்வன்: பா. கார்த்திக் M.E., பேத்தி: MS. கார்முகில்


வெளியீடு

அருவியூர் வடக்குவளவு நகரத்தார்

கல்வி வளர்ச்சிக் கழகம் (பதிவு)

பிரான்மலை

உ

நமது சமூகத்தின் கல்வி வளர்ச்சியே எமது தலையாய குறிக்கோள்

உதவுவோம்! பண்படுத்துவோம்! பாராட்டுவோம்!

**பட்டம் பெற்றுத் தொழிலிற் சிறப்போம்!**

# அருவியூர் நகரத்தார் குரல்

ஆண்டு 25
குரல் 156

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து - குறள் 398

நவம்பர் -2021
பிலவ - ஐப்பசி





கடிதம், செய்திகள், படைப்புகள் இவற்றை
அனுப்ப வேண்டிய முகவரி :
அருவியூர் நகரத்தார் குரல்,
அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்,
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளெக்ஸ் பின்புறம்,
பொன்னமராவதி,
புதுக்கோட்டை - 622 407.
avnkalvi@gmail.com



**குரல் ஆண்டு சந்தா : ரூ. 100/-**
**குரல் ஆயுள் சந்தா : ரூ. 1500/-**


## இனிய தீபாவளி நல் வாழ்த்துகள்

வாழ்வில் இருள் விலகி, இல்லாமை மறைந்திட...
தீயவை தொலைந்து, நல்லவை கூடிட...
தடைகள் தாண்டி, இன்பங்கள் பெருகிட...
நேசம் வளர்த்து, சொந்தங்கள் கூடிட...
உள்ளதைப் பகிர்ந்து, நண்பர்கள் சேர்ந்திட...
மகிழ்ச்சியில் திளைத்து, இனிப்புகள் உண்டு..
ஆரோக்கியம் கண்டு, உள்ளங்கள் நிறைக்கும்..
இனிய தீபாவளி திருநாள் வாழ்த்துகள்!!



**- கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகள்**

# உள்ளடக்கம்

தலைவர் சிந்தனை

**செ. ஆசை அலங்காரம்** B.Sc.,

தலைவர்

**மக்கள் சேவையே மகேசன் சேவை**



ஒரு சிறுமி இரண்டு ஆப்பிள் பழங்களை வைத்து விளையாடிக் கொண்டிருந்தாள். அங்கு வந்த அக் குழந்தையின் தாய் “இரண்டு ஆப்பிள் பழங்களில் ஒன்றை எனக்குத் தா, நான் பசியோடு இருக்கிறேன்” என கேட்டார். குழந்தை ஒரு விநாடி தன் தாயின் முகத்தைப் பார்த்து யோசித்தது; தன் கைகளில் இருந்த இரண்டு ஆப்பிள்களில் ஒன்றை கடித்து சுவைத்து பார்த்தது. நான் பசியோடு சோர்வுற்று இருக்கிறேன் என கேட்டும், நம் குழந்தை நம் நிலையை உணராமல் சிறிதும் நம்மீது பாசமும், இரக்கமும் இல்லாமல் இருக்கிறாளே என வருந்தி திகைத்துப்போய் ஏக்கத்துடன் குழந்தையின் முகத்தைப் பார்த்தாள். குழந்தை சிரித்துக்கொண்டே மீண்டும் தன் தாயின் முகத்தை பார்த்துவிட்டு, இரண்டாவது ஆப்பிளை எடுத்து கடித்துப் பார்த்தது. இப்பொழுது தாய் அதிர்ச்சி அடைந்து திகைத்துப் போய்விட்டாள். அப்படி திகைத்துப் போய் நின்ற தன் தாயிடம் “அம்மா! இந்த ஆப்பிள் மிகவும் சுவையாக இருக்கிறது. இதை நீ சாப்பிடு” என கொடுத்து விட்டு முதலில் தான் சாப்பிட்டதில் மீதமிருந்த ஆப்பிளை சாப்பிட ஆரம்பித்தாள். தன் குழந்தை தன்மீது கொண்டுள்ள அன்பையும் பாசத்தையும் நினைத்து அந்த தாய் நெகிழ்ந்து போனாள். தன்னாலேயே தன் குழந்தையைப் புரிந்து கொள்ள முடியவில்லை என நினைத்து வருந்தி வேதனைப்பட்டாள். இரண்டு ஆப்பிள்களையும் கடித்து சுவைத்துப் பார்த்து பதில் சொல்லும் வரை காத்திராமல் அவசரப்பட்டு குழந்தையை தவறாக நினைத்ததை எண்ணி வருந்தி வேதனைப்பட்டாள். மன்னரின் மணிமகுடத்தை கண்ணால் பார்த்தவுடனேயே அதன் எடையையும், மதிப்பையும் கச்சிதமாக கணக்கிட்டு நுண்ணறிவு பெற்றவர்கள் நம் முன்னோர்கள்.

அவர்களின் வழிவந்த நாம், நம் சமுதாயத்தில் கடந்த சில தினங்களாக வாட்ஸ்அப் செய்திகள் மூலம் பலரை பெரிய அளவில் காயப்படுத்திவிட்டன. பண்பட்ட நமது சமுதாயத்தில் இனிவருங்காலங்களில் இது போன்ற வாட்ஸ்அப் செய்திகள் பதிவதை தவிர்க்கவேண்டுமாய் கேட்டுக்கொள்கிறேன்.

**நமக்கு எவ்வளவு வயது அனுபவம் இருந்தாலும் சற்று பொறுமையாகவும், நிதானமாகவும் இருந்து அவர்களின் செயல்களையும் அதன் முழு பின்னனியையும் முழுமையாக அறிந்த பின்னரே அவர்களைப் பற்றிய மதிப்பீடு செய்ய வேண்டும்.** அது தொடர்பான விமர்சனங்கள் செய்ய வேண்டும் என்பதே இக்குழந்தைக் கதை மூலம் நாம் அறியு வேண்டிய நீதியாகும்.

**நம் மனக்கணக்குகள் தவறலாம்,**

**மனிதர்களைப் பற்றிய கணக்குகள் தவறக்கூடாது.**

*******

**பொதுநலச் சங்க நிர்வாகிகள் சிந்தனைக்கு....**

நமது சமுதாயத்தில் பல படித்த பட்டதாரிகள், பொறியாளர்கள், மருந்து தயாரிப்பு தொழில் நிர்வாகம் மற்றும் பல துறைகளில் படித்துவிட்டு வேலை கிடைக்காமல் அல்லது அவர்கள் தகுதிக்கும், திறமைக்கும், அனுபவத்திற்கும் ஏற்றஊதியம் கிடைக்காமல் இளைஞர்கள் பலர் சிரமப்படுகிறார்கள். நம்மவர்களில் பள்ளி கல்லூரிகளுக்குச் செல்லாத பலர் பட்டறிவு (அனுபவம்) நிரம்பப்பெற்றவர்களாக இருக்கிறார்கள். இவர்களை எல்லாம் ஒருங்கிணைத்து நமது சமுதாயத்தின் சார்பில் ஒரு பொதுநிறுவனம் ஒன்றை அமைத்து, அவர்களின் தகுதிக்கும், திறமைக்கும் ஏற்ப ஊதியம் மற்றும் ஊக்கத்தொகை (incentive) வழங்கலாம்.

நம் ஆச்சிமார்கள் தயாரிக்கும் கை சுற்றல் முருக்கு, வடகம், சீடை போன்ற தின்பண்டங்களுக்கு சந்தையில் நல்ல வரவேற்பு உள்ளது. பாய் முடைவதற்குத் தேவைப்படும் ஈச்சஞ்செடிகளில் உள்ள ஈச்சமார்களை அறுக்கச் சென்றபொழுது, வேட்டைக்கு வந்த புதுக்கோட்டை மன்னருக்கு தாகம் எடுக்க, குடிக்கத் தண்ணீர் கிடைக்காமல்

தவித்த நேரத்தில் மன்னருக்கு தண்ணீர் கொடுத்து தாகத்தை தீர்த்ததாகவும், அதனால் மகிழ்ச்சியுற்ற மன்னர் நம்மவர்களுக்கு அந்த இடத்தை சுற்றியுள்ள சுமார் 40 ஏக்கர் நிலப்பரப்பு உள்ள இடத்தை தானமாக வழங்கினார் என்பது உண்மையான வரலாறு. தேனிமலைக்கு அருகிலுள்ள சாத்தனூர் என்று அழைக்கப்படும் அந்த இடத்தில் நமது முன்னாள் பொதுநலச் சங்க நிர்வாகிகள் முந்திரி பயிரிட்டு இன்று முந்திரி தோப்பாக காட்சி அளிக்கிறது.

முந்தைய காலத்தில் வீட்டு வேலைகளை முடித்துவிட்டு ஓய்வாக இருக்கும் நேரத்தை நம் வீட்டு ஆச்சிமார்கள் பாய், தடுக்கு முடைதல் போன்ற பல பயனுள்ள வழிகளில் செலவழித்தார்கள். இது நம் குலத்தொழிலாகக் கருதப்பட்டது. இதனால் கிடைக்கும் வருமானத்தை சிறுக சிறுக சேமித்தார்கள். அந்தச் சேமிப்பை **சிறுவாட்டுபணம்** என்று சொல்வோம். அந்தப் பணம் ஒரு கட்டத்தில் ஒரு பெரிய தொகையாக வளர்ந்து பிள்ளைகளின் திருமணம், வீடு கட்டுதல் போன்ற பல நற்காரியங்களுக்குப் பயன்படுத்தியதின் மூலம் தனது குடும்ப தேவைகளுக்குச் சரியான தருணத்தில் பங்கு கொண்ட திருப்தியும், மன நிறைவும் பெண்களுக்கு ஏற்பட்டது. இதனால் அப்பெண்களுக்கு அவர்களின் குடும்பத்தில் மதிப்பும் மரியாதையும் கூடியது மட்டுமல்லாமல் கௌரவமாகவும், மரியாதையாகவும் நடத்தப்பட்டார்கள். அன்றைய நிலையில் வீட்டில் உள்ள பெண்கள் அனைவரும் இதுபோன்ற ஏதாவதொரு சுயதொழில் செய்தார்கள். படித்து வேலைக்குச் சென்றுள்ள பெண்கள் தவிர மற்றவர்கள் கைத்தொழில்கள் செய்து வருமானம் ஈட்டுவதுடன் அழிந்து வரும் இத்தொழில்களை பாதுகாக்கவும் உதவினார்கள். எனவே படித்தவர்கள், படிக்காதவர்கள் ஆண்கள் பெண்கள் என்கிற பாகுபாடின்றி அவரவர் தகுதி திறமைக்கு ஏற்ப அனைவருக்கும் வேலை வாய்ப்புகள் கிடைக்கக் கூடிய அளவில் தொழில் நிறுவனங்கள் தொடங்கப்பட வேண்டும்.

பொதுநலச் சங்க நிர்வாகம் இதனை சமுதாய நலன் கருதி நம்மவர்களில் உள்ள பல துறை வல்லுநர்கள், அனுபவசாலிகள் கொண்ட குழு அமைத்து அவர்களின்

ஆலோசனைகளைப் பெற்று தொழில் நிறுவனங்களைத் தொடங்க முன்வர வேண்டும். படித்துவிட்டு வேலைக்கு செல்பவர்களின் வருமானத்திற்கு உச்சவரம்பு உண்டு. ஆனால் தொழில் செய்பவர்களின் வருமானத்திற்கு உச்சவரம்பு கிடையாது. **எனவே நாம் வேலை தேடுபவர்களாக இல்லாமல் வேலை கொடுப்பவர்களாக வளர வேண்டும்.** என் சார்பிலும், கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகத்தின் சார்பிலும், நம் மக்களின் சார்பாகவும் நம் பொதுநலச்சங்க நிர்வாகத்திற்கு நான் விடுக்கும் வேண்டுகோள் என்னவென்றால் கல்வி வளர்ச்சிக் கழகம் தொடங்கி புரட்சிகள் செய்து கல்வியில் நம் மாணவர்கள் சிறந்து விளங்கி மேன்மைபெற உதவினோமோ அதே போன்று **தொழில் வளர்ச்சிக் கழகம்** என்கிற ஒரு அமைப்பு ஏற்படுத்தி நம் எதிர்கால சந்ததியினரின் வாழ்க்கை முன்னேற்றத்திற்கு வழிவகுத்து உதவிட வேண்டுகிறேன். இதுபோன்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தும் முயற்சியில் நாங்களும் உறுதுணையாக இருப்போம் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

**மருத்துவ உதவித்தொகை வழங்குவது குறித்து :**

இரண்டாவதாக நாம் வழங்கும் மருத்துவ உதவித்தொகை அவர்களின் மருத்துவ செலவை முழுமையாக ஈடுகட்டாவிட்டாலும், ஓரளவாவது ஈடு கட்டும் வகையில் உயர்த்தி வழங்கப்பட வேண்டும். அதே போன்று முதியோர், விதவைகள் உதவித்தொகை மிகவும் சிறிய தொகையாக வழங்கப்பட்டு வருகிறது. இன்றைய காலச் சூழ்நிலையில் இது அவர்களின் வாழ்க்கை நடைமுறைக்கு எந்தவிதத்திலும் உதவிகரமாக அமையாது என்பதால் முதியோர் உதவித்தொகையையும் உயர்த்தி வழங்கிட பொது நலச்சங்கம் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமாய் கேட்டுக் கொள்கின்றேன்.

**நகரத்தார் பெருமக்களின் சிந்தனைக்கு :**

தாய் தந்தையர் இல்லாத குழந்தைகள், வருமானத்தை ஈட்டித் தரும் பெற்றோர் (Earning member) இல்லாத ஆதரவற்ற குழந்தைகளின் கல்விக் கட்டணத்தை (Tuition Fees) கல்வி வளர்ச்சிக் கழகம் ஏற்றுக் கொள்ளலாம் என கடந்த 2020-21

கல்வி ஆண்டில் நிர்வாகக் குழுவில் முடிவு செய்யப்பட்டது. மேலும் இத்திட்டத்தைச் செயல்படுத்த அதற்கென தனியாக நிதியைத் திரட்டலாம் எனவும் அக்குழந்தைகளைத் தத்தெடுத்து அவர்களின் கல்விக் கட்டணத்தை செலுத்த முன்வரும் நன்கொடையாளர்களை இருகரம் கூப்பி ஏற்றுக் கொள்ளலாம் எனவும் முடிவு செய்யப்பட்டது. இத்திட்டம் அறிவிக்கப் பட்டவுடனேயே கல்லம்பட்டி N. விக்னேஷ், ஆலவயல் அ. சாரதி, சிறுகுடி M. மீனாட்சி ஆகியோர் உதவிகோரி மனுச்செய்தார்கள். அவர்களின் உண்மை நிலையை அறிந்தபின் அவர்களுக்கு உதவலாம் என நிர்வாகக் குழுவில் முடிவு செய்யப்பட்டது. நம் கல்வி வளர்ச்சிக் கழக இணைத்தலைவர் மாபெருங் கொடைவள்ளல் திரு. A.P. ஸேதுராமன், கல்வி வளர்ச்சிக் கழகச் செயலாளர் கல்விக்காவலர் திரு. சுப. செல்வம், கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகி திரு. G. இளங்கோவன் ஆகியோர்கள் மேற்சொன்ன மாணவர்களின் கல்விக் கட்டணத்தை ஏற்றுக் கொண்டு உதவி வருகிறார்கள்.

அதேபோன்று இந்த ஆண்டு உதவி கோரி ஆலவயல் அ. ஜனனி B.Sc., Viscom, மணப்பாறை S. அருணாசலம் M.Sc. Data Science மனுகொடுத்துள்ளார்கள். அம் மாணவர்களின் கல்விக்கட்டணத்தை ஏற்று தத்தெடுத்துக் கொள்ளும் நல் உள்ளம் படைத்தவர்களை வரவேற்கிறோம். மேலும் இத்திட்டத்திற்கென தனியாக நிதி சேர்க்கவுள்ளோம். ஏழை ஒருவருக்கு எழுத்தறிவித்தல் தர்மங்களில் எல்லாம் உயர்ந்த தர்மம் என்று வேதம் சொல்லுகிறது. அத்தகைய உயர்ந்த தருமத்தில் நீங்களும் பங்கு கொள்ள வேண்டுமாய் அன்போடு கேட்டுக் கொள்கிறேன்.தொகை சிறியதா? பெரியதா? என்பது எங்களுக்கு முக்கியமல்ல. நம் அனைவரின் பங்களிப்பும் (நன்கொடை) கல்வி வளர்ச்சிக் கழகத்தின் வளர்ச்சிக்கும் அதன் மூலம் நம் மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கும் உதவியாக இருக்கும். நீங்கள் எந்த நிலையில் இருந்தாலும் உங்களின் நிலைக்கேற்ப நன்கொடைகள் வழங்கி நம் சந்ததியினரின் எதிர்கால வாழ்க்கை மேன்மைபெற உதவிட வேண்டுமாய் கேட்டுக் கொள்கின்றேன்.

**அனைவரின் சிந்தனைக்கும்.....**

சிலரின் கதைகள், கவிதைகள், கட்டுரைகள், செய்திகள் மட்டுமே நகரத்தார் குரலில் வெளியிடப்படுவதாக சிலர் ஆதங்கப்படுகிறார்கள். **நாங்கள் படைப்பாளிகள் யார் என்று பார்ப்பதில்லை. அவர்களின் கருத்துக்கள் சரியானதாக இருக்கும் பட்சத்தில் அவைகளை அப்படியே குரலில் பிரசுரம் செய்கிறோம்.** நம் சமுதாய செய்திகள் அனைவருக்கும் தெரிய வேண்டும். படைப்பாளிகள் நிறைய உருவாக வேண்டும். மாணவர்களை ஊக்கப் படுத்த வேண்டும் என்பதே குரலின் முக்கிய நோக்கமாகும். நம்மவர்களில் பலர் தங்களின் படைப்புகளை வெளிக்கொணர விரும்பாமல் தன்னுள்ளேயே சுருக்கிக் கொள்கிறார்கள். அவர்கள் தங்களின் படைப்புகளை வெளிப்படுத்துவதன் மூலம் பல நல்ல செய்திகள் பரவி நம் சமுதாயம் தழைக்க வழி வகுக்கும். எனவே தங்களின் கருத்துக்களை, படைப்புகளை, நல்ல செய்திகளை குரல் ஆசிரியர் திரு சுப. செல்வம் அவர்களுக்கு அனுப்பி வைத்து, குரல் மேலும் சிறப்பாகவும், பயனுள்ளதாகவும் வளர்ந்து மிளிர உதவிட வேண்டுமாய் கேட்டுக்கொள்கின்றேன்.

**கல்வி வளர்ச்சிக் கழகச் செய்திகள் :**

கல்விக் கடன் பெற்று படிப்பை முடித்து வேலைக்குச் சென்ற பின்பும் பலர் தாங்கள் பெற்ற கல்விக்கடனை திரும்ப செலுத்தாமல் உள்ளார்கள். பலமுறை நினைவூட்டிய பின் சிலர் தாங்கள் பெற்ற கடனை ஒரு தவணையில் முழுமையாக செலுத்தியுள்ளார்கள் மற்றும் சிலர் தவணை முறையில் செலுத்தி வருகிறார்கள். கடனை முழுமையாக செலுத்தியவர்களுக்கும், செலுத்திக் கொண்டிருப்பவர்களுக்கும் எங்கள் கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்து தங்களின் சமுதாய பொறுப்புணர்வை மதித்து பாராட்டுகிறோம். இது போன்று மற்றவர்களும் கடனை செலுத்தி வந்தால் இன்னும் கூடுதலான மாணவர்களுக்கு அவர்களின் படிப்பிற்கேற்றவாறு உதவித் தொகையை வழங்குவதற்கு உதவியாக இருக்கும் என்பதே எங்கள் நிர்வாகத்தின் தாழ்மையான வேண்டுகோளாகும்.

**இனிய தீபாவளி நல்வாழ்த்துக்களுடன் என்றும் சமூகப்பணியில்**
**ஆசை அலங்காரம்.**

# கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாக குழு கூட்ட நிகழ்வுகள்

அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகத்தின் 2021-22-ஆம் ஆண்டுக்கான முதல் நிர்வாகக் குழு கூட்டம் 03-10-2021 ஞாயிற்றுக்கிழமை அன்று காலை 10.30 மணியளவில் கல்வி வளர்ச்சிக் கழக அலுவலகத்தில் நடைபெற்றது. புதிதாக நியமனம் செய்யப்பட்ட நிர்வாகக்குழு உறுப்பினர்களில் 3 பேர் நேரிலும், இணையவழி (Zoom Meeting) மூலமாக, இணைத்தலைவர் திரு சொ. இராமனாதன், துபாய் அவர்களும் பொறுப்பேற்றுக் கொண்டார்கள். சிறப்பு அழைப்பாளராக முன்னாள் பொருளாளர் திரு சே. சந்திரசேகர் அவர்கள் Zoom Meeting மூலம் கலந்து கொண்டு சிறப்பித்தார். கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. அடுத்துவரும் 3 ஆண்டுகளில் இந்த நிர்வாகம் செய்ய வேண்டிய திட்டங்கள் பற்றி விரிவாக பேசி, முதலாவதாக கல்வி வளர்ச்சிக் கழகத்தின் நிதி ஆதாரத்தை பெருக்கும் வகையில் புதிய நன்கொடையாளர்களை சேர்ப்பது என்றும், அதற்கு ஏற்ப கல்வி உதவித்தொகையை உயர்த்தி வழங்குவது என்றும் தீர்மானிக்கப்பட்டது. இரண்டாவதாக கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கென சொந்தமாக நிர்வாக அலுவலக கட்டிடம் அமைவதற்குரிய அனைத்து முயற்சிகளும் மேற்கொள்வது என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.
2. நமது கல்வி வளர்ச்சி கழகத்தில் நிதி ஆதாரத்தில் முக்கிய பங்கு வகிக்கும் வைப்புத் தொகையிலிருந்து கிடைக்கும் வட்டித் தொகை வருடா வருடம் வங்கிகள் குறைத்து வருவதால் (தற்போது 5%) சொசைட்டி சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு வருவாயைப் பெருக்க பாதுகாப்பான திட்டங்களில் முதலீடு செய்வது என தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.
3. தாய், தந்தை இழந்த, ஆதரவற்ற, வறுமையில் வாடும் மாணவ மாணவிகளுக்கு சிறப்பு கல்வி உதவித்தொகை

வழங்கும் திட்டத்தின்படி தந்தையை இழந்த ஆலவயலைச் சேர்ந்த மாணவி அ. ஜனனி, மற்றும் மணப்பாறை S. அருணாசலம் ஆகியோர்களின் விண்ணப்பங்கள் பரிசீலிக்கப்பட்டு கல்வி உதவித்தொகையை (Tuition Fees & Exam. Fees) கல்வி வளர்ச்சிக் கழகமே ஏற்றுக்கொள்வது என தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மேலும் சிறுகுடி M. மீனாட்சி அவர்களின் 2021-22-ஆம் ஆண்டுக்கான கல்விக் கட்டணத்தை கல்வி வளர்ச்சிக் கழகச் செயலாளர் திரு. சுப. செல்வம் அவர்கள் ஏற்றுக் கொள்வதாக உறுதி அளித்தார்.

4. மார்ச் 2021-இல் நடந்த பொதுத்தேர்வில் தேர்ச்சி பெற்ற மாணவ மாணவிகளுக்கான பரிசளிப்பு மற்றும் பாராட்டு விழா 25-12-2021 அன்று நடத்துவது என்றும், அன்றே 2020-21-ஆம் நிதி ஆண்டுக்குரிய கல்வி வளர்ச்சிக் கழக ஆண்டுவிழாவையும் சேர்த்து நடத்துவது என்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.
5. மற்ற படிப்புகள் போல் இல்லாமல் C.A. படிப்பு ஆண்டுதோறும் சேரலாம், வருடத்திற்கு இருமுறை தேர்வு எழுதலாம் என்பதால் C.A. (Chartered Accountancy /Cost Accountancy/Company Secretary) படிப்பவர்களுக்கு கீழ்க்கண்டவாறு கல்வி உதவித் தொகை வழங்குவது என தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

i. C.A. நுழைவுத் தேர்வு எழுதுபவர்களுக்கு ரூ.5,000/-

ii C.A. Intermediate சேர்ந்தவுடன் ரூ.6,000/-

iii. C.A. Inter முடித்து Final சேர்ந்தவுடன் ரூ.6,000/-

6. ஆண்டுதோறும் வழங்கும் பெரும் நன்கொடையாளர்கள் பெயர்களை (ரூ.10,000 க்கு மேல்) குரல் புத்தகத்தில் வெளியிட்டு வருகின்றோம். இனிவரும் காலங்களில் ஒவ்வொரு நிதி ஆண்டிலும் சரிபார்க்கப்பட்டு அந்தந்த நிதிஆண்டில் வழங்கும் பெரும் நன்கொடையார்கள் பெயர்களை குரல் புத்தகத்தில் வெளியிடுவது என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

7. நிர்வாகக் குழுவில் இடம்பெற்று சமீபத்தில் பதவி விலகுவதாக தெரிவித்த இரண்டு நிர்வாகிகளுடன் கலந்து பேசி இறுதி முடிவு செய்யலாம் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.
8. நகரத்தார் குரல் ஆண்டு சந்தா தொகை 01-01-2022 முதல் ரூ.120/- ஆகவும், ஆயுள் சந்தா தொகை ரூ.1,800/-ஆகவும் நிர்ணயம் செய்வது என்றும், விளம்பரக் கட்டணங்கள் உயர்வு பற்றி பின்னர் பரிசீலிக்கலாம் என்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.
9. நகரத்தார் குரல் அனுப்பக் கோரும் வெளிநாட்டு வாழ் நகரத்தார்களிடமிருந்து சந்தா தொகையுடன், தபால் செலவு சேர்த்து வசூலித்துக் கொள்வது என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.
10. குரல் புத்தகம் ஆயுள் சந்தா கட்டியவர்களுக்கு அவர்கள் ஆயுள் உள்ளவரை குரல் புத்தகம் வழங்குவது என்றும் அவர்களது வாரிசுகளுக்கு தொடர்ந்து வழங்கத் தேவையில்லை என்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

**- சுப. செல்வம், செயலாளர்.**





# கழக அறிவிப்புகள் - நவம்பர் 2021

**1. தேர்வு / சாதனை பற்றிய விவரங்கள் :**

நமது மாணவச் செல்வங்களின் சாதனை, பல்கலைக் கழக அளவில் ரேங்க், பத்தாம் வகுப்பு படிக்கும்போதே ஹிந்தியில் B.A. பட்டம் பெறுதல், இவ்வாறு தங்கள் குழந்தைகளின் சாதனைகளை படித்து முடித்த, அந்தக் கல்வி ஆண்டிற்குள் கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு ஆதாரங்களுடன் அனுப்பி வைக்க வேண்டுகிறோம். இவ்வாறு உரிய சமயத்தில் கிடைக்கப் பெற்றவை மட்டுமே பரிசளிப்பு விழாவில் பரிசு பெறத் தகுதி உடையவை ஆகும்.

**2. தனித் திறன் மாணவர்கட்கு நிதி உதவி :**

மாணவர்களது தனித் திறமையை வளர்த்திட ஊக்குவிக்கும் வகையில் கல்வி வளர்ச்சிக் கழகம் சார்பில் இரண்டு மாணவர்களுக்கு நிதி உதவி செய்து வருகின்றோம். தகுதியுள்ள மாணவர்கள் தங்களது தனித் திறன் மற்றும் அதில் இதுவரை செய்துள்ள சாதனை விவரங்களுடன் கல்வி வளர்ச்சிக் கழகத்தைத் தொடர்பு கொள்ள வேண்டுகின்றோம்.

**3. நகரத்தார் குரல் சந்தா 2022 :**

**ஆண்டு சந்தா: ரூ.120/-    ஆயுள் சந்தா: ரூ. 1800/-**

நமது நகரத்தார் குரலின் 2022-ஆம் ஆண்டு சந்தா தொகையை டிசம்பர் முதல் வாரத்தில் கட்ட வேண்டும். எல்லா ஊர் செய்தித் தொடர்பாளர்களுக்கும் சந்தா ரசீது புத்தகம் அனுப்ப ஏற்பாடு செய்து வருகின்றோம். வாசகர்கள் தங்கள் ஊர் செய்தித் தொடர்பாளர்களிடம் சந்தா தொகையைச் செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ளவும். தங்கள் முகவரியில் மாற்றம் இருந்தால் செய்தித் தொடர்பாளர்களிடம் தெரிவிக்கவும். குரல் செய்தித் தொடர்பாளர்கள் இல்லாத ஊர்களில் வசிக்கும் வாசகர்கள் தங்களுடைய சந்தாத் தொகையை நேரடியாக கீழே உள்ள கல்வி வளர்ச்சிக் கழக வங்கி கணக்கில் செலுத்தித் தகவல் தர வேண்டுகிறோம்.

**4. குரல் சந்தா மற்றும் விளம்பரக் கட்டணம் அனுப்ப வங்கி கணக்கு விவரங்கள்:**

கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு வங்கி மூலம் குரல் சந்தாவிற்காக பணம் அனுப்புவதற்கு தேவையான விவரங்களைக் கீழே கொடுத்துள்ளோம்.

வங்கியின் பெயர் : இந்தியன் வங்கி, புதுப்பட்டி கிளை
கணக்கு பெயர் : AVN கல்வி வளர்ச்சிக் கழகம்
சேமிப்பு கணக்கு எண்: 5748 35323
IFSC Code : IDIB 000P052

பணம் கட்டிய ரசீதின் பாதிப்பகுதி (Counter Foil) ஜெராக்ஸ் காபியை உடனே வாட்ஸ் அப் மூலம் அனுப்பி வைக்க வேண்டும். WhatsApp. No. 94444 68900

**5. குரல் விளம்பரக் கட்டணம் 2022 :**

2022-ஆம் ஆண்டிற்கு ஆறு இதழ்களில் நமது சமூகத்தவர்கள், வியாபாரிகள் மற்றம் நற்சிந்தனையாளர்கள் அரைப்பக்கம்/முழுப்பக்கம் விளம்பரங்கள் கொடுத்து குரல் வளர்ச்சிக்கு உதவிட வேண்டுகிறோம்.

1. கருப்பு வெள்ளை ஒரு பக்கம் - ஆறு இதழ்கள் - ரூ.3200/-
2. கருப்பு வெள்ளை அரைப் பக்கம் - ஆறு இதழ்கள் - ரூ.1600/-
3. கலர் முழுபக்கம் / பின் அட்டை முக்கால் பக்கம் ரூ.8500/-

குரல் தனிச் செய்தி கட்டணம் (ஒரு இதழ் மட்டும்)

1. முன் அட்டை கலர் - ரூ.5000/-
2. உள் பக்கம் கலர் - ரூ.2500/-
3. கருப்பு வெள்ளை - ஒரு பக்கம் - ரூ.1200/-
4. கருப்பு வெள்ளை - அரை பக்கம் - ரூ.600/-

**6. குரலுக்கு கருத்துக்கள் எழுதுவோர் கவனத்திற்கு:**

நகரத்தார் குரலைப் படித்து தங்களது கருத்துக்களை வாசகர் குரல் பகுதிக்கு எழுதி அனுப்பும் போது தங்களது முழுப்பெயர், விலாசம், செல் நம்பர் இவற்றைக் குறிப்பிட்டால் மட்டுமே வாசகர்குரல் பகுதிக்கு ஏற்றுக் கொள்ளப்படும். வாசகர்ஸ்ரீ கடிதங்கள் குரல் வெளியாகி ஒரு மாதத்திற்குள் எங்களுக்கு கிடைக்குமாறு அனுப்பி வைக்கவும்.

**7. குரலுக்கு படைப்புகள் அனுப்புவோர் கவனத்திற்கு :**

நமது குரலுக்கு அனுப்பும் கட்டுரை, செய்திகள், பொன்மொழிகள் இவைகளைத் தனியாக ஒரு பேப்பரில், தன் சொந்தக் கையெழுத்தில் எழுதி, எழுதியவர் பெயர், பெற்றோர் பெயர், விலாசம், செல் நம்பர் இவைகளைக் குறிப்பிட்டு அனுப்பி வைக்கவும். மேற்குறிப்பிட்ட விவரங்கள் இல்லாதவை பிரசுரத்திற்கு ஏற்புடையது அல்ல என்பதை அறியவும்.

**8. கல்வி வளர்ச்சிக் கழக வாட்ஸ்அப் குரூப் :**

கல்வி மற்றும் வேலைவாய்ப்பு தகவல்களை அறிந்து பயன்பெற, கல்வி வளர்ச்சிக் கழக வாட்ஸ்அப் குரூப்பில் இந்நாள்வரை தங்களை இணைத்துக் கொள்ளாத டிப்ளமா / பட்டப்படிப்பு இறுதி ஆண்டு படிப்பவர்கள், படித்து முடித்து வேலை தேடுபவர்கள் தங்களது வாட்ஸ்அப் நம்பரை 94444 68900 என்ற வாட்ஸ்அப் எண்ணிற்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்கின்றேன்.

**- சுப. செல்வம், செயலாளர்.**

# புதிய கடை திறப்பு விழா




தஞ்சை அ.வ.ந. சங்கச் செயலாளர் **திரு. சொ. இளங்கோவன்** அவர்கள் தஞ்சாவூர்-கரந்தையில் **11-10-2021 திங்கட்கிழமை** அன்று **ஸ்ரீ மாரியம்மன் வாட்டர் சர்வீஸ்** என்கிற பெயரில் இரண்டு மற்றும் நான்கு சக்கர வாகன வாட்டர் சர்வீஸ் சென்டர் ஆரம்பித்துள்ளார்கள்.

**தகவல்: திரு. சொ. இளங்கோவன், தஞ்சாவூர்**



அட்டைப்பட விளக்கம்

# முதலாம் ஆண்டு நினைவஞ்சலி

**தெய்வத்திரு. மு.கு. பாண்டியன் செட்டியார்**

**தோற்றம்: 22-07-1955** **மறைவு: 08-10-2020**

இந்த இதழின் அட்டைப்படத்தை அலங்கரிப்பவர் **பூர்வீகம்-சொக்கம்பட்டி மேலூருடையார் குடிப்பட்டத்தைச் சேர்ந்த தெய்வத்திரு**. MK. **பாண்டியன்** செட்டியார் அவர்கள், இவரது பெற்றோர் **திரு. மு. குழந்தை செட்டியார்-செல்லக்கண்ணு ஆச்சி.** இளம்வயதிலேயே பொன்னமராவதிக்கு வந்து வியாபாரம் செய்தார்கள். இவருக்கு சொக்கம்பட்டியைப் பூர்வீகமாகக் கொண்டு, புழுதிபட்டி. திரு. சீ. சிவலிங்கம் செட்டியார்-பழனியாயி ஆச்சி இவர்களின் புதல்வி திருமதி. சந்திரா ஆச்சியை 1984-இல் மணமுடித்து வைத்தார்கள். இல்லறத்தை நல்லறமாகக் கொண்டு சிறப்புற வாழ்ந்ததின் பயனாக மோகன், கார்த்திக் ஆகிய இரண்டு தவப்புதல்வர்களைப் பெற்று, அவர்களுக்கு சிறப்பான வாழ்க்கை அமைத்துக் கொடுத்தது மட்டுமின்றி, சுற்றமும் பேணி வாழ்ந்து வந்தார்கள். வாழ்வாங்கு வாழ்ந்த திரு. MK. பாண்டியன் செட்டியார் அவர்கள் 08-10-2020 அன்று இறைவனடி சேர்ந்தார்கள். இவரின் முதலாம் ஆண்டு நினைவு நாளில் போற்றி வணங்கிடும் குடும்பத்தார்கள்.

## புகழுஞ்சலி.

குறிஞ்சி நிலமாம்
சொக்கம்பட்டியில் பிறந்து,
பொன்னமராவதிக்கு வந்து
மண வாழ்வில் புகுந்து-இரு
மகன்களைப் பெற்று
அரும்பாடுபட்டு நல் உழைத்து
நலம் பேணி வளர்த்து
அயராது உழைத்து
நன் படிப்பைத் தந்து
பட்டப் படிப்பை படிக்க வைத்து பார்
போற்ற பாராட்டு பெற்று
நல் வாழ்வு அமைத்துக் கொடுத்து
பெரும் அன்பை கொட்டிக்
கொடுத்து
புவிவாழ்வை நிறைவு செய்து
ஈராறு மாதங்கள்
இன்றோடு கடந்து விட்டன.
கண்ணீரால் எங்கள் நெஞ்சம்
கணத்து தான் போனது.
கனவாய் கடந்த இவ்வொரு
வருடத்தில்
நீங்கள் உடன் இருக்கும்
துணிவிலும்
உங்கள் வழிகாட்டுதலிலும்
நீங்காத நினைவுகளுடன்

**வாழும் உங்கள் உறவுகள்..**

மனைவி : **திருமதி. பா. சந்திரா ஆச்சி**

மூத்த மகன்: திரு.**பா.மோகன்** B.E. திருமதி.**மோ.சிவரஞ்சனி** M.Sc.,B.Ed.,

பேத்தி : **மோ. கார்முகில்**

இளைய மகன் : **செல்வன் பா. கார்த்திக்** M.E.,



வாழ்க வளமுடன்
மங்கைபாகர் – தேனம்மை துணை
வாழ்க நலமுடன்
Rtn.PHF.Er.M.SETHURAMAN B.E., MBA., NEBOSH (Dubai-UAE)
IOSH, DSM, DIFSM, MD (Acu), D.Astro, Ex.TNSTC.Ltd.
S.SHANTHI B.Com.,
S.VIJAY B.E., ABUDHABI, UAE
CELL : 81223 80075
www.vijayguesthouse.com
VIJAY GUEST HOUSE
VIJAY GUEST HOUSE
விஜய் கெஸ்ட் ஹவுஸ்
DELUXE AC ரூம்கள்
AC ரூம்கள்
NON AC ரூம்கள்
பெரிய HALL வசதி
24 Hrs WIFI இன்டர்நெட் வசதி
ஒவ்வொரு ரூமிலும் TV வசதி
ATTACHED BATHROOMS
WESTERN TOILETS
VIJAY GUEST HOUSE
(LODGE)
NEAR BUS STAND, MANAPPARAI.
குறைவான கட்டணத்தில், நிறைவான வசதிகளுடன்
தரமான தங்கும் விடுதி

ஆன்மீகப் பகுதி



## திருத்தொண்டர் பெருமை

## 7. எறிபத்த நாயனார்

திருமுறைத் திருப்பணித் தொண்டர், சைவப் புலவர் –
சிவகுரு வா.நா. சுந்தரம் எம்.ஏ., திருவையாறு

**சோழ மன்னர்கள்** பரம்பரையாய் முடிசூட்டிக்கொள்ளும் ஊர்களில் ஒன்றானதும், கொங்கு நாட்டின் மிகப்பழமையானதும், **ஆம்பிராவதி** (தற்போது அமராவதி) நதிக்கரையில் அமைந்ததுமான அழகான மிகப்பழமையான மூதூர் கருவூர் ஆகும். தற்போது கரூர் எனப்படுகிறது. இயற்கை எழில் கொஞ்சும், வளமையான இவ்வூரில் திருஆணிலை எனும் சிவபெருமானின் திருக்கோவில் ஒன்று இருந்தது. இது காமதேனுவாகிய தெய்வப்பசு எம்பிரானை போற்றி வழிபட்டது. ஆகையால் இக்கோவில் ஆ-நிலை என்ற பெயர் பெற்றது. இறைவனைப் போற்றி; வழிபடுவதையே தமது பிறப்பின் நோக்கமாகக் கருதி அவனை வழிபடுவதையும்; அவன் இருக்கும் திருக்கோவில்களுக்குத் தொண்டு செய்வதையுமே கடமையாகக் கொண்டு வாழ்பவர்கள் சிவனடியார்கள். இத்தகைய அடியார் பெருமக்களுக்குத் தொண்டு செய்வதையும், அவர்களுக்கு எவ்வகையேனும் துன்பம் ஏற்பட்டபோது, சிங்கமெனச் சீறிப் பாய்ந்து அத்துன்பத்தைக் களைவதற்காகவும் என; பரமசிவன் கையில் இருக்கும் மழு எனும் ஆயுதம் போன்ற ஒன்றை தம் கையில் எப்போதும் வைத்துக்கொண்டு அவ்வூரில் **எறிபத்தர்** என்ற அன்பர் வாழ்ந்திருந்தார்.

இந்த நகரிலே சிவகாமியாண்டர் என்ற கருவூர் ஆனிலையில் உள்ள சிவபெருமானிடம் பேரன்பு கொண்டவர் நந்தவனங்களில் இருந்து பூக்களைப் பறித்து எடுத்து மாலையாக்கி ஆனிலைச் சிவனின் அழகிய மேனியில் அணிவிக்கும் அருந்தொண்டு செய்து வந்தார். அவர் அதிகாலையில் எழுந்து, ஆற்றில் நீராடி முடித்து தம் வாயை ஓர் தூய துணியால் கட்டிக்கொண்டு, புதிய மலர்களாய் பறிப்பார்.

அதோடு கூட நறுமணமிக்க இலைகள், வேர்கள் ஆகியவைகளையும் சேகரிப்பார். இவை அனைத்தையும் சேர்த்து பள்ளித்தாமம் என்று சொல்வது வழக்கம். இதை பூக்குடலையில் இட்டு நிரப்பி அக்குடலையை ஒரு மரத்தண்டின் நுனியில் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டு, கைகளால் உயர்த்திப் பிடித்தபடி ஆலயத்திற்குச் சென்று; மாலையாகத் தொடுத்து ஆனிலை அப்பனுக்கு அணிவித்து, கண்டு தரிசித்து மகிழ்வார்.

கருவூரை அப்போது புகழ்ச் சோழர் என்பவர் அரசாட்சி செய்து வந்தார். இவர் எம்பிரான்மீதும் அவன் அடியார்கள் மீதும் பேரன்பு கொண்டவர். தம் முன்னோர்களைப் பின்பற்றி சிவபக்தராகவும், மக்களிடம் பெரு மதிப்புப் பெற்றவராகவும் விளங்கி, நல்லாட்சி செய்து வந்தார். சோழ மன்னர் பரம்பரையினருக்கு ஒரு பெருமையுண்டு; சோழ பரம்பரையை வரலாற்று ஆய்வார்கள் முற்காலம், பிற்காலம், இடைப்பட்ட காலம் என்று மூன்றாகப் பகுத்து விவரிப்பார்கள். இதில் வரும் எந்தக் காலத்தைச் சேர்ந்த சோழமன்னரும் பிறமதத்தவராய் இருந்தது இல்லை. சோழ வம்சத்தினர் அனைவரும் சைவ சமயம் சார்ந்து போற்றி சிவபெருமானை மட்டுமே வழிபடுபவர்களாக வாழ்ந்து மறைந்திருக்கிறார்கள். அதே சமயம் சமயப் பொறையுடையவர்களாய், பிற சமயத்தையும், அதைப் பின்பற்றுபவர்களையும் ஆதரித்து, அவர்களுக்குத் தேவையான அனைத்தையும் செய்து கொடுத்து ‘சமயப்பொறை’யுடன் வாழ்ந்திருக்கிறார்கள். இன்று நாம் காணும் கோவில்களில் பெரும்பான்மையானவை சோழர்களின் திருப்பணியே.

**கோச்செங்கனான்** என்ற ஒரு சோழ மன்னன் காவிரியின் இருகரையிலும் மொத்தம் 108 சிவ ஆலயங்களைக் கட்டுவித்தான். **கொகுடிக்கோவில், ஞாலக்கோவில், மாடக்கோவில்** எனப் பலவிதமான கட்டுமானங்களில் அவன் படைத்தளித்தவைகளைத்தான் இன்றும் நாம் வழிபட்டுக் கொண்டிருக்கிறோம். பாண்டியர், சேரர், பல்லவர், களப்பிரர், நாயக்கர் எனத் தமிழகத்தை பலர்

ஆண்டனர் என்றாலும் ஒரு பரம்பரையே சைவசமயமாய் வாழ்ந்தது என்ற பெருமை சோழ வம்சத்தின் தனிப்பட்ட பெருமையாகும். இத்தகைய பெருமைமிக்க சோழ பரம்பரையில் தோன்றி, மிகச் சிறந்த சிவ பக்தனாக **புகழ்ச் சோழர்** என்பவர் கருவூரை ஆண்டுகொண்டிருந்தார்.

ஒருநாள் சிவகாமியாண்டார் வழக்கம் போல் பூப்பறித்து எடுத்துக் கொண்டு, கோவிலுக்கு சரியான நேரத்தில் போய்ச் சேரவேண்டுமென்ற சிந்தனையோடு விரைவாக வந்து கொண்டிருந்தார். மன்னர் புகழ்ச் சோழரின் பட்டத்து யானை மிகவும் முரட்டு குணமும், பெருத்த உருவமும் கொண்டது. அதனை **ஆம்பிராதி** நதியில் குளிப்பாட்டி, அலங்காரங்கள் செய்து, இரு 'பாகர்கள்' அதன்மேல் அமர்ந்தும், ஈட்டி ஏந்தியபடி 'பரிக்காரர்கள்' சிலரும் அதனைச் சூழ்ந்தும் வீதியில் நடத்திக் கொண்டு வந்தனர். நீராடிய களிப்போடு அவ் யானை மலைபோல் அசைந்தபடி ஆடி அசைந்து, பாகர்களின் கட்டுக்குள் அடங்காமல் திமிறி விரைந்து வந்து கொண்டிருந்தது. அங்கும் இங்கும் அசைந்தபடி ஆர்ப்பாட்டமாய் அடங்காமல் வந்த யானை; உயர்த்திப் பிடித்தபடி பூக்குடலையுடன் வந்த சிவகாமியாண்டாரின் கைகளிலிருந்த பூக்குடலையைப் பறித்து இழுத்தது. பூக்கள் வீதியெங்கிலும் சிதறி மண்ணில் வீழ்ந்தது.

வழிபாட்டுக்குரிய மலர்கள் வீணாகிவிட்ட கோபத்தில் அடியவர் தம் கையில் வைத்திருந்த மரத்தண்டால் யானையை அடிக்க முயன்றார். விரைந்து ஓடும் யானையைத் தொடர முடியாமல் கீழே விழுந்தார். துயரம் மேலிட "சிவதா சிவதா" என்று எம்பெருமானைத் துதித்து தன் இயலாமையை எண்ணி ஓலமிட்டு அலறினார். 'சிவதா' என்பது ஆற்றாமையால் இறைவனை எண்ணி, அமங்கலமில்லாமல் கதறும் ஒரு அவலக் கூப்பாடு. உடல் பதறி நடுங்க, கண்ணீர் தாரை தாரையாகப் பொழிய ஓலமிட்டபடி கிடக்கும் அவரை அங்கு வந்த எறிபத்தர் கண்டார். சிவகாமியாண்டாரை வணங்கி உங்களுக்குத் துன்பம் விழைவித்த அந்த யானை எங்கே எனக் கேட்டு அறிந்தார்.

பொங்கும் சினத்தை உடைய ஒரு சிங்கம்போல் எறிபத்தர் கோபத்துடன் சென்று, யானையைக் கண்டார். யானை எப்போதுமே சிவனடியார்களுக்கு தொல்லை கொடுப்பதுதான். முன்பு ஒரு நாள் சிவபெருமான் உரித்த யானை இதுதானோ? என்றெல்லாம் சிந்தித்தபடி, எவர் வந்து தடுத்தாலும், அடியாருக்குத் தொல்லை செய்த இதனைக் கொல்லாமல் விடக்கூடாது என்ற உறுதியுடன், வீராவேசமாய் தம்முடைய மழு ஆயுதத்துடன் யானைமீது பாய்ந்தார். அந்த யானையும் கோபம் கொண்டு எறிபத்தர் நின்ற பக்கமாய் திரும்பி எதிர்த்தது. யானை மீதிருந்த பாகர்கள் எத்துணை முயன்றும் அது அடங்கவில்லை. திருத்தொண்டரான எறிபத்த நாயனார் சிறிதும் அஞ்சாமல் தரையில் புரண்டு கொண்டிருக்கும் அதன் தும்பிக்கையை மழுவாள் கொண்டு வெட்டி வீழ்த்தினார். கடல் முழங்குவது போலக் கதறி, கீழே விழுந்து, மலை சாய்ந்தது போல் சாய்ந்து, உருண்டு, புரண்ட பின் யானை தன் உயிரை விட்டது.

யானையைச் சரிவர நடத்திச் செல்லாத பாகர்கள் இருவரையும், ஈட்டி தாங்கிய பரிகாரர்களில் மூவரையும் கூட மழுவால் வெட்டிச் சாய்த்துவிட்டு, தொண்டரின் துயரத்தை தீர்த்த மகிழ்ச்சியோடு வெற்றி வீரனென நின்றார் நம் எறிபத்த நாயனார். இறந்தவர் போக இருந்தவர்கள் சிலர் அரண்மனைக்கு விரைந்து ஓடி; வாயில் காப்பவனிடம் நம் பட்டத்துயானை வெட்டி வீழ்த்தப்பட்டது, பாகர்களும் சில பரிக்காரர்களும் கொல்லப்பட்டனர், இதனை அரசருக்கு உடனே தெரிவியுங்கள் என்று கூறினர். **பட்டவர்த்தனம்** எனும் தனது பட்டத்து யானையும்,, அதன் பாகர்கள், பரிகாரர்கள் கொல்லப்பட்டதும் அறிந்த மன்னன் கோபம் மிகக் கொண்டு; யார் கொன்றது எனக் கேட்காமல் மிகக் கோபத்தோடு வேகமாக வெளியே விரைந்து வந்தார். மன்னரின் நிலையைக் கண்ட மந்திரி முதலானோர், ஏதோ விபரீதம் நடந்துவிட்டது என நினைத்து, சேனைகள் விரைந்து வரும்படி பறையை முழக்கினர். எதிரிநாட்டு மன்னர்களுடன் போர் செய்வதற்கான அனைத்து ஆயத்தங்களுடன் படைக்கருவிகளையும், யந்திரப்

பொறிகளையும் தாங்கியபடி யானை-குதிரைப் படைகளையும் அழைத்துக் கொண்டு; சங்கு, பறை, தாரை எனும் பல கருவிகள் ஒலிக்க; போர்களம் காணத் தயாராக படைகள் அணிவகுத்து நின்றன. அரசனைத் தொடர்ந்து நால்வகைப் படைகளும் வந்தன. பட்டத்துயானை வெட்டுப்பட்டுக் கிடந்த இடத்தை மன்னன் வந்து அடைந்தான். ஆனால் அங்கு எந்தப் பகைவரையும் கண்டானில்லை. இரத்தம் சிந்தியவாறு தனது பட்டத்துயானை, மலையென விழுந்து மாண்டு கிடப்பதையும்; கையில் மழுவுடன் நிற்கும் எறிபத்த நாயனாரையும் கண்டான் மன்னன். சிவனடியாராகத் தோற்றமளிக்கும் அவர் தமது யானையைக் கொன்றிருப்பார் என அரசன் நினைக்கவில்லை.

'யானையைக் கொன்றது யார்?' இடியென எழுந்தது மன்னன் குரல். 'அரசே தங்களுக்கு இந்த உலகில் பகைவர் என்று எவரும் இல்லை. பரசு எனும் மழு ஏந்தி நிற்கும் இவரே யானையைக் கொன்றவர்' என்றனர் அங்கு இருந்தவர்கள். இங்கு நிற்பவர் சிவனடியாராகிய நற்குண வள்ளல் அல்லவா? யானை ஏதோ தவறு செய்து இருந்தால் அன்றி, இவர் அதனைத் தண்டித்து இருக்கமாட்டார், என் யானை தான் பிழை செய்திருக்கும் என நினைத்தார். தன் சேனை படைகளையும், வீரர்கள் அனைவரையும் ஒரு புறமாக ஒதுங்கி நிற்க ஆணையிட்டபடி, தன் குதிரையிலிருந்து இறங்கினார் மன்னர். இவ்வளவு பெரிய யானை, எறிபத்தர் எதிர்த்தபோது ஏதும் தீங்கு செய்யாமல் விட்டதே நான் செய்த தவம், அடியாருக்கு எந்தப் பாதிப்பும் நேரவில்லை. இவர் இவ்வளவு பெரிய செயலைச் செய்யும்படியாக நமது யானை என்ன பெரும்பிழை செய்ததோ? எனப் பலவாறு மனதிற்குள் எண்ணியபடி, எறிபத்த நாயனார் முன் வந்து நின்று வணங்கினார். 'ஐயா, அரண்மனையில் நான் கேட்டது வேறு, இங்கு நான் காண்பது வேறு. ஆடியவரே! இந்த யானை செய்த பிழை என்னவென்று நான் அறியேன். இது செய்த குற்றத்திற்காக, இதனை இந்த பாகர் மற்றும் பரிக்காரர்களோடு கொன்றது போதுமா? என்பதை மட்டும் தயவுசெய்து கூறுங்கள்' எனப் பரிவோடு கேட்டார்.

சிவநேயச் செல்வரான எறிபத்த நாயனார் மன்னரிடம், “சிவபெருமானுக்கு மாலை புனைந்து அணிவிக்கத் தேடிச் சேகரித்து எடுத்துச் சென்ற பள்ளித்தாமம் நிறைந்த பூக்குடலையை இந்த யானை பறித்து, மலர்களை தரையில் சிந்தியது. சிவ அபராதம் செய்த யானையை நான்தான் வெட்டி வீழ்த்தினேன். இத்தீங்கு நடைபெறாமல் செய்ய வேண்டிய பாகர்களும், பரிக்காரர்களும் தங்கள் கடமையைச் சரிவரச் செய்யாததால் அவர்களையும் வெட்டினேன்” என்றார்.

எறிபத்தர் நாயனாரின் உரைகளைக் கேட்ட மாத்திரத்தில் சிறந்த சிவபக்தனான சோழ மன்னர் புகழ்ச் சோழர் பயந்து நடுநடுங்கி, நாயனாரின் திருப்பாதங்களில் வீழ்ந்து பல முறை வணங்கியபின் பேசலானார். “சிவனடியாருக்கு ஏற்பட்ட அபச்சாரத்திற்கு இங்கு நடந்தது மட்டும் போதாது. யானையையும், பாகர் மற்றும் பரிக்காரர்களையும் வைத்து ஆளும் தலைவனான நானும் இதற்குப் பொறுப்பானவனே ஆகையால் அடியேனையும் கொல்ல வேண்டும். தங்கள் கையில் உள்ள புனிதமான இந்த மழுவாயுதத்தால் கொல்வது சரியல்ல, என்னைக் கொல்வதற்கு இந்த வாள் போதும்” என்று கூறியவாறு தனது இடையில் கட்டி இருந்த வீரவாளை உருவி எடுத்து இருகைகளாலும் ஏந்தி, பணிவுடன் நாயனாரிடம் கொடுத்தார்.

புகழ்ச் சோழர் தவறுக்கு கழுவாய் தேட விரும்பி, தனது வீரவாளை நீட்டிக் கொண்டிருப்பதைக் கண்டதும், எறிபத்த நாயனார் திகைத்து மன்னரைப் பார்த்து “ஐயோ! கெட்டேன், **எல்லையில்லாப் புகழுடைய சோழனுடைய அன்பிற்கும் ஓர் எல்லையில்லை என்பதை இன்று கண்டேன்”** என்று கூறியபடி உள்ளம் பூரித்து மகிழ்ந்தார். மன்னர் நீட்டிக் கொண்டிருக்கும் வாளை வாங்காவிட்டால் ஒருவேளை வேந்தர் தம் உயிரைத் தாமே போக்கிக் கொண்டாலும் கொள்வார், என அவரின் அன்பின் உயர்நிலையை நினைந்து அந்த வாளை மன்னரின் தற்கொலையிலிருந்து அவரைக் காப்பாற்றும் எண்ணத்துடன் வாங்கிக் கொண்டார். உடனே எறிபத்த நாயனார் முன் புகழ்ச் சோழர் தலை வணங்கி, “என் வாளினாலே என்னைக் கொன்று

என் பிழையினுக்குத் தண்டனை அளித்து அருளவேண்டும்” எனப் பணிவோடு யாசித்து மண்டியிட்டார்.

மன்னரின் செய்கையினையும், வார்த்தைகளையும் கேட்ட எறிபத்த நாயனார், பட்டத்து யானையையும், பாகர் பரிகாரர் ஆகியோரையும் கொன்றதோடு, தன்னையும் கொல் என்று தலைகுனிந்து நிற்கும் இம்மன்னனின் அன்பு நெஞ்சுக்கு தீங்கு செய்துவிட்டேனே, என எண்ணி இத்தகைய அன்பருக்குத் துன்பம் தந்த நான் இறப்பதுதான் சரி எனத் தீர்மானித்தார். அரசரின் உடைவாளைத் தனது கழுத்திலே வைத்து கழுத்தை அறுத்துக் கொள்ள முயன்றார். இதனைக் கண்ட அரசர், மிக விரைந்து எழுந்து வலிமையான தனது கரங்களால், நாயனாரின் கையையும் வாளையும் ஒரு சேரப் பிடித்துக் கொண்டார். நாயனார் திமிற, மன்னன் விடாமல் இறுகப்பற்ற அளவற்ற அன்பின் காரணமாக நடக்கும் இந்த அதிசயத்தை, சங்கடத்தைத் தீர்த்து வைப்பதற்காக சிவபெருமானின் திருவாக்கு வானவெளியில் கேட்டது. “அன்பினில் சிறந்த அடியார்களே! உங்களின் அன்பின் அருமை பெருமையை இவ்வுலகத்தார் அனைவரும் அறிந்து கொள்ளச் செய்ய யாம் விரும்பியதால் தான்; பூசைக்குரிய மலர்களையும் **பள்ளித்தாமத்தையும்** யானை சிந்தியது. இவையனைத்தும் தில்லைக் கூத்தன் திருவருளால் நிகழ்ந்தது” எனப் பலரும் கேட்கும்படியாக அவ்வாக்கு ஒலித்தது.

இறந்து கிடந்த யானையும், யானைப்பாகரும், பரிக்காரர்களும் தூங்கி விழித்தது போல, உயிர்பெற்று எழுந்தனர். அதைக்கண்ட எறிபத்த நாயனார் கைவாளைக் கீழே எறிந்துவிட்டு மன்னர் பெருமானின் காலில் விழக் குனிந்தார். அவருக்கு முன்பாகவே புகழ்ச் சோழ மன்னர் நாயனாரின் காலில் விழுந்து வணங்கிக் கிடந்தார். இதனைக் கண்டவர்கள் இருவரின் அன்பையும், இறை பக்தியையும், ஒருவர்மீது ஒருவர் கொண்ட மரியாதையையும் பார்த்து வியந்து போற்றி, வணங்கி மகிழ்ந்தனர்.

வானில் இருந்தபடி இந்த அன்புமிக்க அடியார்கள் செயலைக் கண்ட தேவர்கள் மலர் மாரி பொழிந்தனர். மன்னரும், நாயனாரும் இறைவனின் பேரருள் கருணையைச்

சிந்தித்தபடி கைகளை தலைமேல் குவித்து; வான்ஒலியை வணங்கி சிந்தை மகிழ்ந்தனர். மண்ணிலே சிந்திய மலர்களும், பள்ளித்தாமமும் பூக்குடலையில் வந்து நிறைந்தது! யானைப் பாகர்கள் மகிழ்ச்சியுடன் பட்டத்து யானையை அரசனை நோக்கிச் செலுத்தினர். எறிபத்த நாயனார் அரசரிடம் தாங்கள் யானையின் மீது ஏறி அரண்மனைக்கு எழுந்தருளக என வேண்டினார். குதிரைமீது வந்த மன்னர், யானை மீது ஏறி, நாயனாரின் அன்புக் கட்டளைக்கு உட்பட்டு அரண்மனைக்கு வெண்கொற்றக் குடையின் கீழிருந்தவாறு நலமுடன் வந்து சேர்ந்தார்.

மக்களும், படை வீரர்களும், சிவபெருமானின் அருள் வெளிப்பாட்டையும்; மன்னர் புகழ்ச் சோழர், எறிபத்த நாயனார் ஆகியோரின் பக்தியின் உறுதியையும் பற்றி புகழ்ந்து பேசியபடி திரும்பிச் சென்றனர். சிவகாமியாண்டார் எப்போதும் போல் பள்ளித்தாமம் நிறைந்த பூக்குடலையைச் சுமந்தவாறு திருஆணிலை சிவபெருமான் தொண்டிற்குப் புறப்பட்டுச் சென்றார். சிவபெருமானின் அரும்பெரும் தொண்டரான எறிபத்த நாயனார் சிவனடியார்களின் பெருமையை யார்தான் அறிய முடியும் என்று வியந்து போற்றியபடி; அன்பின் பெருமையை நினைத்து, நினைத்து பரவசமுற்றபடியே, அவரின் திருத்தொண்டை எப்போதும் போலச் செய்து வரலானார். மண்ணுலக வாழ்விற்குப் பின் அவருக்கு எம்பெருமான், திருக்கயிலையில் இருக்கும் சிவகணங்களுக்கு தலைமை தாங்கும் பேற்றினைத் தந்தார்.

அன்பு காட்டுவதில் போட்டி போட்ட புகழ்ச் சோழர், எறிபத்த நாயனார் இவர்களின் செயல்களுக்கு அடிப்படையாய் அமைந்தது, சிவபெருமான் மீதும், அவரின் உண்மைத் தொண்டர்கள் மீதும் வைத்த பேரன்பின்றி வேறு எதுவும் இல்லை. இந்த அன்பை அறிந்து, புரிந்து கொள்ளவும், அளவிட்டுப் பார்த்து அருள் செய்யவும் சிவனால் அன்றி யாரால் முடியும்.

புகழ்ச் சோழரும் நாயன்மாரில் ஒருவராய் வைத்துப் போற்றப்படுவதால் அவருடைய வரலாற்றை பின்னர் பார்ப்போம்.

**அடுத்த இதழில்**
**ஏனாதிநாத நாயனார் தொண்டினைத் தொடர்வோம்.**

# புதிய கல்விக்காவலர்கள்

### கல்விக்காவலர்-36



மேலூருடையார்
தெய்வத்திரு செ. பெ.அ. அலங்காரம் செட்டியார்
(எ) சேதுராமன் செட்டியார்-செம்பாயி ஆச்சி.

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :**

தெய்வத்திரு செ.பெரிய அலங்காரம் செட்டியார்-
பாப்பாத்தி ஆச்சி

**மகன்கள் - மருமகன்கள் :**

திருமதி திலகம் ஆச்சி – இளங்கோ செட்டியார்
திருமதி யோகாம்பாள் (எ) கீதா – திருவாசகம்

**பேரன், பேத்திகள் :**

திருமதி இ. நாகேஸ்வரி (எ) சுகண்யா – ராகுல்
இ. நாகார்ஜுன், தி. வித்யஸ்ரீ, ரா. ஆராத்யா

என்றென்றும் வாழ்க வளமுடன்!

### கல்விக்காவலர்-37



பொன்னமராவதி பூண்டிலூருடையார்
**சி. வெள்ளச்சாமி செட்டியார் -**
**திருமதி சாந்தி ஆச்சி.**

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :**

தெய்வத்திரு ந. சிவசாமி செட்டியார் -
நலமுடன் செண்பக ஆச்சி

**மகன்-மருமகள் :**

வெ. வினோத்குமார் BBM- ஞானசௌந்தர்யா B.Sc.
வெ. விவேக்குமார் B.Com., MBA- காயத்ரி B.E.

**பேரன்-பேத்திகள் :**

வி. ரிஷிகாஸ்ரீ, வி. ரித்திக்ஸ்ரீ

### கல்விக்காவலர்-38



கழனிவாசலூருடையார்
**திரு.V. லெட்சுமணன்செட்டியார்**
**பாக்கியலட்சுமிஆச்சி**
கிருங்காக்கோட்டை

**பெற்றோர் :** திரு சொ.வைத்திங்கம் செட்டியார் – திருமதி அழகு ஆச்சி

**மாமனார்-மாமியார் :**

திரு. சிவசாமி செட்டியார்-குஞ்சரம் ஆச்சி, பூசாரிபட்டி

**உடன்பிறந்தவர்கள் :**

1. தெய்வத்திரு V.மங்கைபாகன்செட்டியார்-நலமுடன் பொன்னழகுஆச்சி
2. தெய்வத்திரு V. வைத்திங்கம்செட்டியார் - பாஞ்சாஆச்சி
3. தெய்வத்திரு V. ராமன்செட்டியார் - மங்களம்ஆச்சி
4. தெய்வத்திரு V. பரமசிவம்செட்டியார் - நலமுடன்கலாதேவிஆச்சி
5. திருV.ஆறுமுகம்செட்டியார்-சாந்தாஆச்சி, கோவை.

### கல்விக்காவலர்–39



**மேலூருடையார்**
**தே.மா.சுப்பையா செட்டியார்**
**சுப. பூங்கோதை ஆச்சி,**
பொன்னமராவதி.

**பெற்றோர் : திரு தே. மாணிக்கம் செட்டியார்**
**தேனம்மாள் ஆச்சி**

**பெற்றோருக்கு பெருமை சேர்க்கும் மகள்கள் :**

1. திருமதி. **M.மாலதி** D. Pharm - திரு. **PL. முருகேசன்**
   **ஸ்ரீ முருகன் மெடிக்கல்ஸ்,**
   N.G.G.O. காலனி, கோவை–22.
2. திருமதி. **S. ஜெயந்தி**–திரு. **A. சண்முகநாதன்,**
   **நாகம்மாள் நோட்புக்ஸ்**, செல்வபுரம், கோவை–26

# பொன்னமராவதி அ.வ.ந. சங்க ஆண்டு விழா

பொன்னமராவதி அ.வ.ந. சங்கத்தின் 49-ஆம் ஆண்டு விழாவும், இளைஞர் பேரவையின் 39-ஆம் ஆண்டு விழாவும், மாதர் சங்கம் திலகவதியார் அருள்நெறி மன்றம் 38-ஆம் ஆண்டு விழாவும் 17-10-2021 ஞாயிற்றுக்கிழமை அன்று பொன்னமராவதி மங்கை நாயகர் மன்றத்தில் சிறப்பாக நடைபெற்றன.

இவ்விழாக்களில் பிரான்மலை அ.வ.ந. பொதுநலச் சங்கத் தலைவர் திரு M.S. முருகப்பன் அவர்களும், செயலாளர் மு. சாமிநாதன் அவர்களும், பொருளாளர் திரு S. மங்கைபாகன் அவர்களும், துணைத் தலைவர் திரு மைனர் வெள்ளச்சாமி அவர்களும், கல்வி வளர்ச்சிக் கழகத் தலைவர் திரு செ. ஆசை அலங்காரம் அவர்களும், செயலாளர் திரு. சுப. செல்வம் அவர்களும், பொருளாளர் திரு S. முத்து அவர்களும், சிறுகுடி சங்கத் தலைவர் திரு பொன். சிவஞானம் அவர்களும், V. புதூர் சங்கத் தலைவர் திரு வே. கணேசன் அவர்களும் சிறப்பு அழைப்பாளர்களாக கலந்து கொண்டார்கள்.

காலை 7 மணிக்கு மாதர் சங்கத்தினர்களின் விளக்கு பூஜையுடன் விழா தொடங்கியது. 9 மணிக்கு இளைஞர் பேரவை சார்பாக சிறுவர் சிறுமியர்களின் கலை நிகழ்ச்சியும் மற்றும் பரிசளிப்பு விழாவும் நடைபெற்றன. காலை 11 மணியளவில் பொதுக்குழு மற்றும் ஆண்டு விழா நிகழ்ச்சி தொடங்கியது. துணைத் தலைவர் திரு PL. ராமஜெயம் அவர்கள் வரவேற்புரை வழங்க தலைமை உரையை தலைவர் திரு M. ராமசாமி அவர்களும், செயலாளர் அறிக்கையை செயலாளர் M. சரவணன் அவர்களும் வரவு செலவு அறிக்கையை பொருளாளர் திரு சொ. செந்தில் குரு அவர்களும், துணைத்தலைவர் M.S.M. சாமிநாதன் மற்றும் சேமிப்புத் திட்ட பொறுப்பாளர் திரு STKR S . சுந்தரமூர்த்தி அவர்கள் சேமிப்புத் திட்ட அறிக்கையை வாசித்தார்கள். இவ்விழாவில் பிரான்மலை பொதுநல சங்கத்தின் புதிய நிர்வாகிகள் மற்றும் கல்வி வளர்ச்சிக் கழகத்தின் புதிய

நிர்வாகிகளையும் பாராட்டி, பொன்னமராவதி சங்கத்தின் முன்னாள் தலைவர்கள் திரு ச. வேலாயுதம் அவர்களும், அறமனச்செம்மல் திரு அரு.வே. மாணிக்கவேலு அவர்களும்; வாழ்த்தினார்கள். பிரான்மலை பொதுநலச் சங்க புதிய நிர்வாகிகளும், கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகளும் சிறப்புரை ஆற்றினார்கள்.

இளைஞர் பேரவையின் தலைமை உரை மற்றும் திட்ட அறிக்கையை தலைவர் திரு R. மணிகண்டன் அவர்களும், செயலர் அறிக்கையை திரு K. முத்துக்கருப்பன் அவர்களும், வரவு செலவு அறிக்கையை பொருளாளர் திரு N. தண்டபாணி அவர்களும் வாசித்தார்கள். இளைஞர் பேரவையின் புதிய நிர்வாகிகளை முன்னாள் பொருளாளர் திரு S. சிவநேசன் அவர்கள் பாராட்டினார்கள்.

மாதர் சங்க தலைமை உரையை தலைவி திருமதி கற்பகம்ஜெயமுருகேசன் அவர்களும் செயலர் அறிக்கையை செயலாளர் திருமதி மோகனா சண்முகம் அவர்களும் வரவு செலவு அறிக்கையை பொருளாளர் திருமதி ஆனந்தி பழனியப்பன் அவர்களும் வாசித்தார்கள். மாதர் சங்க புதிய நிர்வாகிகளை தேசிய நல்லாசிரியர் திரு நா. திருநாவுக்கரசு அவர்கள் பாராட்டினார்கள். மாதர் சங்கத்தினரால் நடத்தப்பெற்ற தண்ணீர் பந்தல் சேவையை பொறுப்பேற்று திறம்பட நடத்திய திருமதி லெட்சுமி சொக்கலிங்கம் அவர்களை, துணைத்தலைவர் திரு M.S.M. சுவாமிநாதன் அவர்கள் பாராட்டினார்கள்.

விழாவின்போது 31 முறை ரத்ததானம் செய்த பொன்னமராவதி திரு தே. கண்ணன் அவர்களைப் பாராட்டி திரு PL. ராமஜெயம் அவர்கள் ரூ.5001/- வெகுமதி வழங்கினார். இத்தொகையை திரு தே. கண்ணன் அவர்கள் அதே மேடையில் கல்வி வளர்ச்சிக் கழகத்திற்காக நன்கொடை வழங்கினார்கள்.

விழாவின்போது 2019-20 & 2020-21 கல்விஆண்டுகளில் 10 மற்றும் 12-ஆம் வகுப்புகளில் முதலிடம், இரண்டாமிடம் மற்றும் மூன்றாமிடம் மேலும் 60%-க்கு மேல் மதிப்பெண்கள் பெற்ற மாணவ மாணவியர்களுக்கு பரிசுகள் வழங்கி பாராட்டப்பெற்றனர். இவர்களை

செயற்குழு உறுப்பினர்கள் திரு தே.மா. பழனிச்சாமி செட்டியார், திரு சுப. பழனிச்சாமி மற்றும் திரு வெ. இராஜகோபால் ஆகியோர்களும் வாழ்த்தினார்கள். பள்ளி மாணவ மாணவிகளுக்கு அறமனச்செம்மல் திரு அரு.வே. மாணிக்கவேலு அவர்கள் சிறப்பு பரிசுகள் வழங்கி வாழ்த்தினார்கள்.

கொரோனா பெருந்தொற்று காலத்தில் நிவாரணப் பொருட்களை வழங்கியவர்களை திரு. PPC. ராஜா அவர்கள் பாராட்டி கௌரவப்படுத்தினார்கள். பொன்னமராவதி சங்க நிர்வாகிகள் மற்றும் செயற்குழு உறுப்பினர்களையும் பாராட்டி கொரவிக்கப்பட்டார்கள். இறுதியாக பொருளாளர். திரு. செந்தில் குரு அவர்கள் அனைவருக்கும் நன்றி தெரிவிக்க அறுசுவை விருந்துடன் விழா இனிதே நிறைவுபெற்றது.

**தகவல்: திரு சொ. செந்தில்குரு, பொன்னமராவதி.**

# மாதர் சங்கம் சார்பாக கம்பராமாயணம் தொடர் வாசிப்பு நிகழ்ச்சி

பொன்னமராவதி அ.வ.ந. திலகவதியார் அருள்நெறி மாதர் சங்கம் சார்பாக கம்பராமாயண தொடர் வாசிப்பு 28-ஆம் ஆண்டு நிகழ்ச்சி, கடந்த 09-10-2021 சனிக்கிழமை தொடங்கப்பட்டது. 16-10-2021 அன்று ராமர் பட்டாபிஷேகமும் 17-10-2021 அன்று ஸ்ரீ ஆஞ்சநேயர் வரலாறு மற்றும் வழிபாட்டுடன் மொத்தம் 9 நாட்கள் பொன்னமராவதி மங்கை நாயகர் மன்றத்தில் சிறப்பாக நடைபெற்றது. இந்நிகழ்ச்சிகளில் பொன்னமராவதி சங்க நிர்வாகிகள் மாதர் சங்க நிர்வாகிகள், இளைஞர் பேரவை நிர்வாகிகள், நகரத்தார் பெருமக்கள் திரளாக கலந்து கொண்டனர்.

கலந்து கொண்ட அனைவருக்கும் உபயதாரர்கள் சார்பாக தினந்தோறும் பிரசாதமும், பட்டாபிஷேகம் அன்று இளைஞர் பேரவை சார்பாக அறுசுவை விருந்தும் வழங்கப்பட்டது.

**தகவல். திரு. சொ. செந்தில்குரு, பொன்னமராவதி.**

சங்க நிகழ்ச்சிகள்

## அ.வ.ந. சங்கம் V.புதூர்
# ஆறாவது ஆண்டு விழா

07-05-2021 வெள்ளிக்கிழமை அன்று V.புதூர் அருள்மிகு வள்ளித்தாய் கோவில் வீட்டில் V.புதூர் நகரத்தார் பொதுக்குழுக் கூட்டமும், சங்க ஆறாவது ஆண்டு விழாவும் சங்கத் தலைவர் திரு. V.**கணேசன்** தலைமையில் இறைவணக்கத்துடன் சிறப்பாக நடைபெற்றது.

V.புதூர் சங்க உறுப்பினர்களின் விருப்பப்படி கீழ்கண்ட பதவிகளுக்கு, நிர்வாகிகள் போட்டியின்றி தேர்ந்து எடுக்கப்பெற்றனர்.

**தலைவர்** : திரு. வே. கணேசன் அவர்கள்

**துணைத் தலைவர்** : திருமதி. சாவித்திரி இளங்கோ அவர்கள்

**செயலாளர்** : திரு. M. சொக்கலிங்கம், S/o மயிலப்பன்.

**பொருளாளர்** : திரு. PL. குமார், S/o பழனிச்சாமி

நன்றி உரைக்குப்பின், மங்கள வாழ்த்து பாடலுடன் கூட்டம் இனிதே நிறைவுபெற்றது.

**தகவல்: திரு V. கணேசன், தலைவர், அ.வ.ந. சங்கம், V. புதூர்.**

# இலவச கண்சிக்கிச்சை முகாம்



**10-10-2021** அன்று ஆலவயலில், பொன்னமராவதி ராயல் லயன்ஸ் சங்கம், ஆலவயல் அ.வ.ந. சங்கம், மற்றும் மதுரை அரவிந்த் கண் மருத்துவனையும் சேர்ந்து நடத்திய கண்சிகிச்சை முகாமில் பொதுமக்கள் பெருமளவில் கலந்துகொண்டு பயனடைந்தார்கள். சிகிச்சை பெற்ற பொதுமக்களுக்கு உணவும் வழங்கப்பட்டது.

இந்த இலவச கண்சிகிச்சை முகாமில் அ.வ.ந. பொதுநலச்சங்கத் தலைவர் திரு. M.S. முருகப்பன் அவர்களும், பொன்னமராவதி சங்கத் தலைவர் திரு. M. ராமசாமி அவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். அவர்களுக்கு ஆலவயல் அ.வ.ந. சங்க நிர்வாகிகள் பொன்னாடை அணிவித்து கெளரவித்தார்கள்.

**தகவல்: திரு பழ. சொக்கலிங்கன், ஆலவயல்**

# கன்னிகாதானம்



தானங்களிலேயே வயிற்றுப்பசியைப் போக்குகிற அன்னதானமே சிறந்தது என்று சொல்வார்கள். நிதானமே சிறந்தது என்பவர்களும் உண்டு. ஆனால் தானங்களிலேயே மிகப் பெரியதாக மகா தானமாக சாஸ்திரங்களின் குறிப்பிடுவது **கன்னிகாதானத்தைதான்.**

திருமணம் செய்துவைக்கும்போது, தந்தையானவர் தான் பெற்ற பெண்ணை மற்றொரு குடும்பத்தில் பிறந்த ஆண்மகனுக்கு தானமாக அளித்து அவனிடம் ஒப்படைக்கும் இந்த நிகழ்வையே கன்யாதானம் அல்லது கன்னிகாதானம் என்கிறார்கள்! இந்த உலகில் பலவித தானங்கள் செய்யப்பட்டாலும் அவை எல்லாவற்றிலும் உயர்ந்தது இந்த கன்னிகாதானமே என்பதற்கு இந்த நிகழ்வின்போது சொல்லப்படுகிற சங்கல்பமும், மந்திரமுமே சாட்சி.

**தசானாம்பூர்வேஷாம், தசானாம்பரேஷாம்**
**மம ஆத்மனஸ்ச ஏகவிம்சதிகுல உத்தாரண...**

என்று அந்த மந்திரம் நீள்கிறது. அதாவது கன்யாதானம் செய்பவனுக்கு முன்னால் உள்ள பத்து தலைமுறைகளும், பின்னால் வருகிற பத்து தலைமுறைகளும் கன்யாதானம் செய்பவனது தலைமுறையையும் சேர்த்து ஆக மொத்தம் இருபத்துயோரு தலைமுறைகளையும் கரைசேர்க்கும் விதமாக இந்த கன்னிகாதானம் என்று அழைக்கப்படுகிற மகாதானத்தைச் செய்கிறேன் என்பது இந்த மந்திரத்தின் பொருள். “உன் வம்சவிருத்திக்காக எம் குலவிளக்கை உனக்கு தானமாக அளிக்கிறேன்” என்று ஒரு தந்தை செய்யக்கூடிய கன்னிகாதானமே உலகில் அளிக்கப்படுகின்ற தானங்களில் மிகப்பெரியது என்று சாஸ்திரம் போற்றுகிறது.

ஒருவன் பெண்பிள்ளையைப் பெற்று, அவளைக் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்து, மற்றொருவனின் வம்சவிருத்திக்காக அவளை தானம் செய்து கொடுப்பதால், அவனது வம்சத்தில் 21 தலைமுறைகளும் கரையேறுகிறது என்றால் பெண்பிள்ளையைப் பெற்றவன் எப்பேர்ப்பட்ட புண்ணியம் செய்தவன் என சிலாகிக்கிறார்கள் சான்றோர்கள். ஆக பெண்பிள்ளையைப் பெற்றவன், இருபத்தியோரு தலைமுறைகளைக் கரையேற்றும் வாய்ப்பைப் பெறுகின்றான் என சாஸ்திரங்களால் போற்றப்படுகிறான்.

**–சுப. செல்வம், குரல் ஆசிரியர்**

வாழ்க வையகம்! உ வாழ்க வளமுடன்!!

**நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்**

மக்கள் நோயற்ற வாழ்வு வாழவும், நோய் வந்தால் விரைவாக குணம் பெற்று நலமுடன் வாழவும் வாழ்த்துகிறோம்.

## ஸ்ரீஅம்பாள் மெடிக்கல்ஸ்

பஸ் ஸ்டாண்டு முன்புறம், பொன்னமராவதி - 622 407.

**லயன் மு. வையாபுரி ராஜ்குமார். செல் : 98426 50806**

## ஸ்ரீஅம்பாள் மெடிக்கல்ஸ்

127, முருகன் காம்ப்ளக்ஸ், கோவைபுதூர், கோவை - 641 042.

**மு. கார்த்திக் D.Pharm., செல் : 98426 50506**

## நியூ ஸ்ரீஅம்பாள் மெடிக்கல்ஸ்

அம்பேத்கார் சதுக்கம், அறிவொளி நகர், கோவை - 641 042.

அரசு ராமனாதன் MCA., செல் : 98422 44497

**கொட்டாம்பட்டியில் ஓர் இனிய உதயம்**

**5.3.2020 முதல் - பேருந்து நிலையம் எதிரில்**



# திருமண தம்பதிகள்



**மணமக்கள் :**

செல்வன் சி.அருண் B.E., MBA.,

செல்வி சு. அகிலா B.Com.,

**மணமகன் பெற்றோர் :**

தெய்வத்திரு. சு. சிவலிங்கம் செட்டியார் - நலமுடன்

திருமதி. அன்புமலர் ஆச்சி, விழுப்புரம்.

**மணமகள் பெற்றோர் :**

தெய்வத்திரு. அ. சுந்தரமூர்த்தி செட்டியார்- நலமுடன்

திருமதி. சிவயோகம் ஆச்சி, பேராவூரணி.

**நிகழ்விடம் :** சொக்கம்பட்டி, மங்கைபாகர்-தேனம்மை திருமண மண்டபம்.

**மணநாள் :** 16-09-2021, வியாழக்கிழமை.

## நன்கொடையாளருக்குப் பாராட்டு

17.10.2021 அன்று நடைபெற்ற பொன்னமராவதி அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கத்தின் ஆண்டுவிழாவின் போது 31 தடவை ரத்த தானம் அளித்த திரு. தே. கண்ணன் அவர்களைப் பாராட்டி கௌரவிக்கும் வகையில் திரு. இராமஜெயம் அவர்கள் வெகுமதியாக ரூ.5001/- வழங்கினார்கள்.

தான் பெற்ற வெகுமதித் தொகை 5001-ஐ மறுகணமே சற்றும் தாமதிக்காமல் மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்காக அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகளிடம் நன்கொடையாக வழங்கினார்கள். வலது கை கொடுப்பது இடது கை அறியா வண்ணம் வழங்கும் கர்ண மஹாராஜனைப்போல் நன்கொடை வழங்கிய பொன்னமராவதி **திரு. தே. கண்ணன்** அவர்களை கல்வி வளர்ச்சிக் கழகம் பாராட்டுவதில் பெருமிதம் கொள்கிறது.

**-தலைவர், கல்வி வளர்ச்சிக் கழகம்.**




பூர்வீகம் ஒடுகம்பட்டி, தஞ்சாவூர்

**திரு. எஸ். மாணிக்கம் செட்டியார் - திருமதி. சுசிலா ஆச்சி குடும்பத்தினர்**

ரூபாய் **1,00,000/-** நன்கொடை வழங்கி **40வது கல்வி காவலராக** இணைந்துள்ளார்கள் என்பதை பெருமகிழ்வுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

(முழுவிவரம் ஜனவரி இதழில்)





17-10-2021 அன்று பொன்னமராவதி ஆண்டு விழாவின்போது **திரு. PL. ராமஜெயம்** அவர்கள் செம்பூதி **திரு. தே. கண்ணன்** அவர்களுக்கு 31 முறை இரத்ததானம் வழங்கியதற்காக ரூ.5001/- வழங்கி பாராட்டினார்கள்.

**திரு. தே. கண்ணன்** அவர்கள் தனது ரத்ததானத்திற்காக கிடைத்த பரிசுத் தொகை ரூ.5001/- ஐ உடனே மேடையிலேயே கல்வி வளர்ச்சி கழக நிர்வாகிகளிடம் தனது நன்கொடையாக வழங்கி பாராட்டுப் பெற்றார்

பூர்வீகம் – சொக்கம்பட்டி ஆதப்பச் செட்டியார் வகையறா
காரைக்குடி கழுகக்கூருடையார் பங்காளிகளுக்கு உட்பட்ட

# ஸ்ரீ நாகம்மாள் படையல் வீடு திறப்புவிழா நிகழ்வுகள்

## சொக்கம்பட்டி

**விழா நாள்: 20.8.2021 ஆவணி மாதம் 4ம் நாள் வெள்ளிக்கிழமை**

பெரும் முயற்சியாளர்கள்:

**திரு. R. நல்லபாகன் செட்டியார் மகன் N. மங்கைபாகன் - M. காவேரி,**
**நாகு விலாஸ்,** காரைக்குடி.




படையல் வீடு



கணபதி ஹோமம் ஆரம்பம்



விளக்கு பூஜை



பூர்ணாகுதி இடுதல்

# ஸ்ரீ நாகம்மாள் படையல் வீடு திறப்புவிழா நிகழ்வுகள்



தீபாராதனை



கோ பூஜை



பொங்கல் வைத்தல்







விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்த பங்காளிகளும் மாமன் மைத்துனர்களும்

# மாபெரும் கொடை வள்ளல்

## மாபெரும் கொடை வள்ளல்



திரு.ஏ.பி. ஸேதுராமன்- திருமதி. விஜயலெட்சுமி ஸேதுராமன்
அரசு மெடிக்கல்ஸ் குரூப்ஸ், கோயம்புத்தூர்

## அருந்தவப் பெற்றோர்



தெய்வத்திரு.தீ.ப. பொன்னுச்சாமி செட்டியார்
தெய்வத்திரு.பொ. அன்னமயி ஆச்சி

## சிறப்பு மாபெருங்கொடை வள்ளல்



செல்வன் R.M. செந்தில்

## அருந்தவப் பெற்றோர் :



தெய்வத்திரு. கா. ராமசாமி செட்டியார்
தெய்வத்திரு. ராம. ஆனந்தவள்ளி ஆச்சி
பொன்.புதுப்பட்டி.

## மாபெரும் கொடை வள்ளல்



திரு. சொ. இராமநாதன் F.C.A., I.C.W.A.,
திருமதி. இராம. சிவசக்தி
செம்பூதி - துபாய்

## அருந்தவப் பெற்றோர்



தெய்வத்திரு சு. சொக்கங்கம் செட்டியார்
திருமதி. தேனம்மாள் ஆச்சி
செம்பூதி

## பெருங்கொடை வள்ளல்



திரு. சொ. வைத்திலிங்கம் B.E., M.Sc.,
திருமதி. பாப்பா வைத்திலிங்கம்
பொன்னமராவதி - மதுரை

## அருந்தவப் பெற்றோர்



தெய்வத்திரு சே.அ. சொக்கங்கம் செட்டியார்
தெய்வத்திருமதி. மயிலம்மாள் ஆச்சி

# 2020-2021 ல் பெருந்தொகை வழங்கிய நன்கொடையாளர்கள் 31.03.2021

**மாபெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **A.P. ஸேதுராமன் – விஜயலட்சுமி,** கோவை.
2. திரு. **செல்வன் R.M. செந்தில்,** பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. இராமநாதன் – சிவசக்தி** (செம்பதி) துபாய்.

**பெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் – பாப்பா ஆச்சி,** மதுரை.

**கொடை வள்ளல்கள் :**

1. திருமதி. **இராம. லதா அவர்கள்,** நத்தம்.
2. திரு. **து. அரவிந்த் குமார் B.E., M.S., – பத்மா B.E.,** சென்னை.
3. தெய்வத்திரு. **STKR. சக்திவேல் – ராஜலெட்சுமி,** பொன்னமராவதி.

**வள்ளல்கள் :**

1. திரு. **M. பாலகிருஷ்ணன் – பானுமதி ஆச்சி,** சிங்கம்புணரி.
2. திரு. **செ. ஆசை அலங்காரம் குடும்பத்தார்,** சிறுகுடி.
3. திரு. **M.S. முருகப்பன்,** பொன்னமராவதி.
4. திரு. **சொ. முருகேசன் – கவிதா,** சிவகாசி.
5. திரு. A. முருகன் - செல்வமணி நீடாமங்கலம்
6. திரு. T.M.R.S. சிவக்குமார் – அருணோதயம், கோவை
7. திரு. ம.சி.கு.கு. கணேசன் செட்டியார் – தென்னசரசி ஆச்சி கோவை

**6-12 மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கும் நன்கொடையாளர்கள்**

1. **சிங்கம்புணரி மீனாட்சி நல்லதம்பி வலச்சேரிப்பட்டி தெய்வானை வள்ளியப்பன்** நினைவாக அவந பொதுநலச்சங்கம், பிரான்மலை.
2. தெய்வத்திரு. **மு.அ. பரமசிவம் செட்டியார் – அங்கம்மாள் ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் – பாப்பா ஆச்சி** குடும்பத்தார், மதுரை.
4. திரு. **தே.மா. பழனிச்சாமி செட்டியார் – பழ. சரஸ்வதி ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
5. தெய்வத்திரு. **தீ.பழ. பொன்னுச்சாமி செட்டியார் – அன்னமயிலி ஆச்சி** நினைவாக **A.P. ஸேதுராமன் – விஜயலட்சுமி,** கோவை.

**தங்கப்பதக்கம் வழங்கும் நன்கொடையாளர்கள் : 10ஆம் வகுப்பு**

1. முதல் கல்வி காவலர் நினைவாக, கல்விக்காவலர், கல்வி தாய் தந்தை சுப.நேசமணி செட்டியார் – புவனேஸ்வரி ஆச்சி சார்பாக கேப்டன். நே. சரவணன் பிரியா – சச்சின் நங்கநல்லூர் – சென்னை – 61
2. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்,** கோவை.
3. திரு. **ஆ. ஆறுமுகம் – சாந்தி,** கோவை.

**12ஆம் வகுப்பு**

4. திரு. **அரு.சோம. சண்முகநாதன் – சிவகாமி,** தூத்துக்குடி.
5. முதல் கல்வி காவலர் நினைவாக கல்விகாவலர். சுப. செல்வம் செட்டியார் ஆனந்தம் ஆச்சி சார்பாக செ.இளவரசன் – விசாலா. நங்கநல்லூர், சென்னை – 61

### சமையல்பகுதி

## சத்துமிக்க பசுங்கலவை (Salad) தயாரித்தல்



1. பொடி பொடியாக நறுக்கிய முட்டைகோஸ், கேரட், பீன்ஸ், வெங்காயம், மல்லி தழை, மற்றும் கறிவேப்பிலை, தேங்காய்துருவல், எலுமிச்சம் பழம் 5 சொட்டு, மிளகு பொடி, சீரக பொடி, உப்பு தேவையான அளவு சேர்த்து அனைத்தையும் கலந்து சாப்பிட நீரிழிவு, பிளட் பிரசர் குறையும். கண்பார்வை கூடும். நரம்புகளுக்கு நல்லது.

2. கேரட் துருவல், ஆப்பிள், அண்ணாசி பழம், தேங்காய் துருவல் இந்துப்பு, ஏலக்காய், மிளகு பொடி சேர்த்த பசுங்கலவை சாப்பிடுவது இரத்த விருத்திக்கு நல்லது.

3. வாழைத்தண்டு, மாதுளை, திராட்சை, மிளகுத் தூள், உப்பு சிறிதளவு, சீரகத் தூள், மல்லித்தளை சேர்த்து பசுங்கலவை உண்ண, உடம்பு குளிர்ச்சி ஆகும். கெட்ட கொழுப்பும் குறையும்.

4. புடலங்காய், தக்காளி, மிளகுத் தூள், சீரகத் தூள், எலுமிச்சம் பழம், வெங்காயம், கறிவேப்பிலை, தேங்காய், உப்பு தேவையான அளவு கலந்த பசுங்காய்கறி கலவை சாப்பிட, நோய் எதிர்ப்பு சக்தி, அதிகமாகும். இரத்த விருத்திக்கும் நல்லது.

5. பூசணிக்காய், பரங்கிக்காய், சௌசௌ, பீர்க்கங்காய், வாழைக்காய் என்று எல்லா காய்கனிகளையும் பயன்படுத்தி பசுங்கலவை தயாரித்து ருசியாக சாப்பிட உடலும் உறுதிபெறுவதுடன் மனதுக்கும் மிகவும் நன்மை பயக்கும்.

**வாசகர்கள் மேற்படி பசுங்கலவை செய்து சாப்பிட்ட அனுபவங்களை பகிர்ந்து கொள்ளவும்.**

**- திருமதி. ஆனந்த செல்வம், நங்கநல்லூர், சென்னை-61**

# கல்விக் காவலர்கள்

1. **மே 2004 : முதல் கல்விக் காவலர், ஆமலூருடையார், தெய்வத்திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார் – அன்னபூரணி ஆச்சி அவர்கள், அம்மன் குறிச்சி, சென்னை.**
2. ஜூலை 2004 : மேலூருடையார், **திரு. தே.மா. பழனிச்சாமி செட்டியார் – திருமதி. சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
3. செப்டம்பர் 2006 : கழனிவாசலூருடையார் **திரு.நா. சுப்பிரமணியன்** BSc., CAIIB **திருமதி. தமிழ்ச்செல்வி** B.Lit., அவர்கள், கல்லம்பட்டி, சென்னை.
4. **மார்ச் 2007 : நாவலூருடையார், திரு. ச. கனகசபை B.E., மனோரஞ்சிதம்** அவர்கள், உலகம்பட்டி, திருச்சி.
5. ஜூலை 2007 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. இராம. வேலாயுதம் செட்டியார் – பார்வதி ஆச்சி** அவர்கள், படமிஞ்சி, சென்னை.
6. நவம்பர் 2007 : கழனிவாசலூருடையார், **தெய்வத்திரு. மு.சி.கி. நாராயணன் செட்டியார் – இராஜமாணிக்கம் ஆச்சி** அவர்கள்,கல்லம்பட்டி.
7. மே 2010 : சிக்கலூருடையார், **தெய்வத்திரு. நல்லாசிரியர் மெ. இளங்கோ – சாவித்திரி** அவர்கள். வா.புதூர்.
8. ஜூலை 2011 : அரும்பாக்கிளையார். திரு. **M.M. தியாகராஜன் B.Sc., தெய்வத் திருமதி. ஜோதிமணி** அவர்கள் புழுதிப்பட்டி. மதுரை.
9. ஜனவரி 2012 : பொன்னமராவதி பூண்டிலூருடையார். தெய்வத்திரு. மா. தங்கராஜன் – அழகுமீனாள் அவர்கள், புழுதிபட்டி பெங்களூரு.
10. மார்ச் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு. மு.ஆ. இராமசாமி செட்டியார். தெய்வத்திருமதி. இராஜாமணி ஆச்சி,** சொக்கம்பட்டி.
11. மே 2012 : நாவலூருடையார், **திரு. ச. சொக்கலிங்கம் செட்டியார் – தெய்வத்திருமதி. தனபாக்கியம் ஆச்சி** அவர்கள் உலகம்பட்டி.
12. **ஜூலை 2012 : கழனிவாசலூருடையார். திரு. P.L. இராமஜெயம், பத்மாவதி அவர்கள், பொன்னமராவதி.**
13. செப்படம்பர் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு.** M.S.M. **மாணிக்கம் செட்டியார் – சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
14. **நவம்பர் 2012 : பணப்பாக்குழூருடையார். தெய்வத்திரு. கு. சொக்கலிங்கம் செட்டியார் - சொ. தேனம்மாள் ஆச்சி, செம்பூதி.**
15. மார்ச் 2013 - அரும்பாக்கிளையார், **தெய்வத்திரு. இராம. கதிரேசன் செட்டியார். திருமதி.முத்துலெட்சுமி ஆச்சி,** புழுதிப்பட்டி.
16. **மே 2013 : மேலூருடையார். தெய்வத்திரு. தே.மா. நாராயணன் செட்டியார் – சண்முகவள்ளி ஆச்சி,** பொன்னமராவதி.
17. ஜூலை 2013 : பூதமங்கலமூருடையார். **திரு. ச. இராமலிங்கம் – இராஜமாணிக்கம்,** அயனாவரம். சென்னை.
18. நவம்பர் 2013 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. துரைராசு செட்டியார் – மீனாட்சி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை

19. ஜனவரி 2014 : நாவலூருடையார். **தெய்வத்திரு. அரு. வேலாயுதம் செட்டியார் – சம்பூர்ணம் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

**20. மார்ச் 2014 : பூதமங்கலமுருடையார். திரு. R. பரமசிவம் B.E., தெய்வத்திருமதி. சிவகாம சுந்தரி, பொன்னமராவதி, சென்னை.**

**21. ஜனவரி 2015 : பூதமங்கலமுருடையார். திரு. அ.சொ. சண்முகம் செட்டியார் – ஜெயபாரதி ஆச்சி, அம்மன்குறிச்சி, திருச்சி.**

**22. மார்ச் 2015 : அரும்பாக்கிளையார். திரு. A.P. ஜெயபால் – புவனேஸ்வரி, பொன்னமராவதி, ஈராடு.**

23. ஏப்ரல் 2015 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. ம.வெ. நாராயணன் செட்டியார் – மீனாட்சி ஆச்சி** உலகம்பட்டி.

24. ஏப்ரல் 2015 : நாவலூருடையார். **திரு. சித. நடராஜன் செட்டியார், தெய்வத்திருமதி. இராஜம்மாள் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

25. மே 2015 : நாவலூருடையார். **திரு. அரு.வே. மாணிக்கவேலு – சரஸ்வதி,** பொன்னமராவதி.

**26. ஜூலை 2015 : ஆமலூருடையார். திரு. வெ.இராம.சுப. செல்வம் B.Sc.,ACA., – ஆனந்தம் ஆச்சி, அம்மன்குறிச்சி, சென்னை.**

27. ஜனவரி 2016 : அரும்பாக்கிளையார், தெய்வத்திரு. **மங்கைபாகன் செட்டியார் – சிகப்பி ஆச்சி,** புழுதிப்பட்டி.

28. மே 2016 : கமுகக்கூருடையார், **திரு. சி.சொ.மு. இராமையா செட்டியார் – தெய்வத்திருமதி. ஜெகநாதம் ஆச்சி,** கொன்னைப்பட்டி, தேனி.

29. செப்டம்பர் 2017 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. நேசமணி செட்டியார் – அருள்நிதி புவனேஸ்வரி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை.

30. ஜனவரி 2018 : பணப்பாக்கூருடையார் **தெய்வத்திரு. சுப. மணிவாசகம் செட்டியார் – தேன்மொழி ஆச்சி,** காரைக்குடி.

31. செப்டம்பர் 2018 : கமுகக்கூருடையார் **திரு. சோம. கதிரேசன் செட்டியார் – தவமணி ஆச்சி,** பொன்னமராவதி, தொட்டாம்பாளையம்.

32. ஜூலை 2019 : அரும்பாக்கிளையார் **திரு. பொன். சிவஞானம் செட்டியார் – ராஜகுமாரி ஆச்சி,** சிறுகுடி.

**33. ஆகஸ்ட் 2019 : நாவலூருடையார் தெய்வத்திரு. சித. மாணிக்கம் செட்டியார் – அழகுமீனாள் ஆச்சி, பொய்யாமணிப்பட்டி.**

**34. ஆகஸ்ட் 2019 : வரதலூருடையார் ந. செல்வம் செட்டியார் – சிவயோகம் ஆச்சி, புழுதிபட்டி / கோவை.**

**35. ஜனவரி 2020 : பழனி ஆதிசைவ அன்னதான மடம் – அருள்மிகு பழனி ஆண்டவர் அறக்கட்டளை, பழனி.**

36. மார்ச் 2020 : மேலூருடையார் **தெய்வத்திரு. செ.பெ.அ. அலங்காரம் செட்டியார் – திருமதி. செம்பாயி ஆச்சி,** சிறுகுடி.

**37. அக்டோபர் 2020 :** பொன்னமராவதி **பூண்டிலூருடையார்**

**திரு. சி. வெள்ளனச்சாமி செட்டியார் - திருமதி. சாந்தி ஆச்சி, சிறுகுடி / கோவை.**

**38. டிசம்பர் 2020 : கழனிவாசலூருடையார் கிருங்காக்கோட்டை**

**திரு. V. லட்சுமனன் செட்டியார் - பாக்கியலட்சுமி ஆச்சி தம்பதியர்**

**39. மே 2021 :** மேலூருடையார் **செம்பூதி/பொன்னமராவதி** தெய்வத்திருவாளர்கள்

**தே.மா. சுப்பையா செட்டியார்- சுப. பூங்கோதை ஆச்சி**

உ



சிறுகுடி தெய்வத்திரு எம். சண்முகம் பி.இ.
அவர்களின் நல்லாசியுடனும்,
பொதுமக்களின் பேராதரவுடனும்
7-ஆம் ஆண்டாக வெற்றிநடை போடும்




**எங்களிடம் தங்கள் விசேஷத்திற்குத் தேவையான**

- பனீர்
- பட்டர்
- கோவா
- சீஸ்
- பால், தயிர்
- பேபிகார்ன்
- ஸ்வீட் கார்ன்
- ரெடிமேட் பூரி
- ரெடிமேட் புரோட்டா
- ரெடிமேட் சப்பாத்தி
- தண்ணீர் பாட்டில்
- ஐஸ்கிரீம்
- காளான் ஊறுகாய்
- ஸ்ரீதேவி பிரியாணி பேஸ்ட்
- Frozen Items



**ஆர்டரின் பேரில் ஏற்பாடு செய்து தரப்படும்.**

S. **பழனியப்பன்** B.E., © 90257 87637, 70107 91246



# அர்ச்சனா ஜெனரல்ஸ்
# காளான்
## நேரடி விற்பனை நிலையம்
**(மொத்தம் & சில்லரை விற்பனை)**

தலைமை தபால் நிலையம் எதிரில், ST கொரியர் அருகில்,
ஸ்கீம் ரோடு, திண்டுக்கல் - 624 001.

E-mail : archanaageneralsdgl@yahoo.in

**குடும்ப நிகழ்ச்சிகள்**

## காப்பு கட்டு விழா

பொன்னமராவதி பூதமங்கலமூருடையார் திரு. S.கணேசன் செட்டியார் - திருமதி. G.செல்வி ஆச்சி இவர்களின் மகன் வழி பேரனும், சென்னை, நங்கநல்லூர் திருமதி சே. பரமேஸ்வரி ஆச்சி அவர்களின் மகள் வழி பேரனும், திரு. G.சூர்யகாந்த், திருமதி. S. செல்வமலர் தம்பதியரின் மகனுக்கு G.S. **ஆதிரன்** என்று பெயர் சூட்டு விழாவும், காப்பு கட்டு விழாவும் 26.8.2021 வியாழக்கிழமை அன்று சென்னை நங்கநல்லூர் திருமதி சே. பரமேஸ்வரி ஆச்சி அவர்களின் இல்லத்தில் சுற்றமும் நட்பும் சூழ மிக சிறப்பாக நடைபெற்றது. **- தகவல்: திரு. A.S. முருகேசன், சென்னை.**

## காப்பு கட்டு விழா

பூர்வீகம் ஒடுவன்பட்டி, தஞ்சாவூர் S. மாணிக்கம்-சுசீலா இவர்களது மகன் வழிப் பேத்தியும், திண்டுக்கல் திரு.D.ராஜசேகர பாஸ்கரன்-இளவரசி இவர்களது மகள் வழிப் பேத்தியும், திரு. M.அண்ணாமலை B.E., - A.பவித்ரா B.E. இவர்களின் குழந்தைக்கு **மிதுரப்பிரியாள்** என்று பெயர் சூட்டி காப்புகட்டு விழா 23.09.2021 வியாழக்கிழமை அன்று மிக சிறப்பாக நடைபெற்றது.

**தகவல்: திரு சொ. இளங்கோவன், தஞ்சாவூர்.**

### சிந்தனைக்கு...

நன்றி உணர்வு எழுந்துவிட்டால்
குறை சொல்லும் இயல்பு மறைந்து விடும்

துன்பத்தை விரட்ட சிறந்த வழி
அதனை முதலில் மறப்பதுதான்

**- செம்பொன், சிறுகுடி**

# வாசகர் குரல் - கும்பாபிஷேக மலர்

**வாசகர் குரல் 1 :**

கும்பாபிஷேக மலர் முதல் பக்கம் அட்டை மிகவும் வண்ண மலர்களால் அலங்கரித்தது மிகவும் சிறப்பாக அமைந்துள்ளது. மிக்க மகிழ்ச்சி. அருள்மிகு மங்கைபாகர் தேனம்மை கோயிலும், அதன் மேல் மலையையும் முழு உருவத்தை அலங்கரித்தது மிக மிக அருமை. அருள்மிகு மங்கைபாகர் தேனம்மையை கலரிலும், இயற்கை ரூபமாகவும் அலங்கரித்தது மனதை நெகிழ வைத்தது.

முன்னால் தலைவர்களது, மலர் குழுவினரது போட்டோவை மலரில் பிரசுரித்தது மற்றும் கும்பாபிஷேக நிகழ்ச்சிகளையும் போட்டோ எடுத்து பிரசுரித்தது மிக மிக சிறப்பானது. கும்பாபிஷேக நன்கொடையாளர்களை ஞாபகப்படுத்தி மலரில் வெளியிட்டமைக்கு மிக்க நன்றி.

சிவலிங்கத்தின் தத்துவம் என்ற கட்டுரை விளக்கம் கொடுத்த திரு. சுப. திருஞானசம்பந்தம் அவர்களுக்கு மிக்க நன்றி.

**திருமணம் செய்யும் முறை :**

வார்ப்பட்டு ந.ஏ. ஏகாம்பர செட்டியாரால் இயற்றப்பெற்ற நகரத்தார் திருமணம் செய்யும் முறை அன்றைய முறைகள்- வழி முறைகள் பற்றி விளக்கியதை மலரில் வெளியிட்டதற்கு மிக்க நன்றி. வார்ப்பட்டு S.H. ஏகாம்பர செட்டியார் அவர்களை மனமார வாழ்த்துகிறேன்.

**காப்பு கட்டுதல் :**

திருமதி. அமுதா தேனப்பன் அவர்கள் காப்பு கட்டுதல் முறையை விவரமாக எழுதியுள்ளது மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது.

இப்பொழுதுள்ள தலைமுறைகளுக்கு மேலே கூறிய மூன்று நிகழ்ச்சிகளை விவரமாக எழுதியுள்ளவர்களுக்கும், தெரிந்தும் - தெரியாமல் இருந்தவர்களுக்கு தெரியும்படியாக உணர்த்திய பெரியவர்களை மனமார வாழ்த்துகிறேன்.

**சிவபாதம் சேர்ந்தார்க்கு செய்ய வேண்டிய முறைகள் :**

இறைவனடி சேர்ந்தார்க்கு செய்ய வேண்டிய வழி முறைகள் பற்றி இப்பொழுதுள்ள இளைய தலைமுறைகளுக்கு தெளிவுபடுத்திய தேசிய நல்லாசிரியர் திரு நா. திருநாவுக்கரசு அவர்களைப் பாராட்டுகிறேன்.

**திருமண சீர்முறைகள் :**

திருமண சீர் வரிசை செய்யவேண்டிய பொருட்கள், அவைகளின் எண்ணிக்கை குறித்து விளக்கம் கொடுத்த பொன்-புதுப்பட்டி திருமதி. தி. செந்தாமரை திருநாவுக்கரசு அவர்களை பாராட்டி நன்றி தெரிவித்துக் கொள்கின்றேன்.

**சங்கங்கள் :**

சங்கங்களின் செயல்பாடுகளையும், அவைகளின் வளர்ச்சி பற்றியும் ஒவ்வொரு சங்கத்தின் உறுப்பினர் பட்டியல் விவரங்களையும், நிர்வாகிகளின் விவரங்களையும், சங்க கட்டிடத்தையும் பிரசுரித்த மலர் குழுவிற்கு மிக்க நன்றி.

நம் சமூகத்தின் ஒவ்வொரு ஊர் சங்கத்தின் உறுப்பினர் விவரங்களை ஆண், பெண், குழந்தைகள் எண்ணிக்கையுடன் வெளியிட்டது குறித்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

**பாராட்டுக்களும், வாழ்த்துகளும் :**

பிரான்மலை கும்பாபிஷேக மலரை மிக அருமையான விவரங்களும், கருத்துக்களும், கும்பாபிஷேக நிகழ்ச்சி புகைப்படங்களும் அழகுற அலங்கரிக்க, தொகுத்து வெளியிட்ட மலர் குழுவினரையும், குரல் பதிப்பாசிரியர் திரு சுப. செல்வம் அவர்களையும் தஞ்சாவூர் சங்கம் மனமார பாராட்டி வாழ்த்துகிறது.

**- திரு. பெ. சிவன்ஜோதி, தஞ்சாவூர்**

**சிந்தனைக்கு**

சினம் உள்ளவனிடம் உண்மை இருக்காது.
பணம் உள்ளவனிடம் நிம்மதி இருக்காது.
இந்த இரண்டும் உள்ளவனிடம் உயர்வே இருக்காது.

**- I. சாமி ஆஸ், கோவை.**

**வாசகர் குரல் : 2 கும்பாபிஷேக மலர்**

12-09-2019 அன்று நடைபெற்ற பிரான்மலை அருள்மிகு மங்கைபாகர்-தேனம்மை திருக்கோயில் மஹா கும்பாபிஷேகத்தைத் தொடர்ந்து அ.வ.ந. பொதுநலச்சங்கத்தால் வெளியிடப்பட்ட கும்பாபிஷேக மலரில் பிரசுரிக்கப்பட்டுள்ள கும்பாபிஷேக விழா நிகழ்ச்சிகளும், போட்டோக்களும், அருள்மிகு மங்கைபாகர்-தேனம்மை சுவாமிகளுடைய வண்ணப் படங்கள் அனைத்தும் மிகவும் அருமையாக அமைந்துள்ளன.

நகரத்தார் பெருமக்கள் வசிக்கும் அனைத்து ஊர்களுக்குச் சென்றும், நிர்வாகிகளைத் தொடர்பு கொண்டும் விளம்பரங்களைச் சேகரித்த மலர்க்குழுவினர்களுக்கும், நகரத்தார் பெருமக்களின் படைப்புகளையும், அனைத்து ஊர் சங்க விவரங்களை கலர் போட்டோ விலாசத்துடனும், அருவியூர் நகர் பற்றிய விவரங்களையும், சிவபுரிபட்டி கோவில் விவரங்களையும், நகரத்தார் மக்கள் தொகை கணக்கெடுப்பையும் தெளிவான முறையில் வெளியிட்ட பொதுநலச் சங்கத் தலைவர் திரு Er. M. மாணிக்கம் அவர்களுக்கும், கல்வி வளர்ச்சிக் கழகத்தலைவர் திரு செ. ஆசைஅலங்காரம் அவர்களுக்கும் மற்றும் மலர் தயாரிப்பில் அயராது பணியாற்றிய செயலாளர் திரு சுப. செல்வம் அவர்களுக்கும், விளம்பரங்கள் கொடுத்து பேருதவி புரிந்த அனைத்து நகரத்தார் அன்பு உள்ளங்களுக்கும், நன்றியையும், பாராட்டையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

கும்பாபிஷேக மலரை கண்ணைக் கவரும் வகையில் அழகுற வடிவமைத்து அச்சிட்டு உதவிய சிவகாசி சூர்யா பிரிண்ட் சொலுசன்ஸ் அச்சக உரிமையாளர் திரு சொ. முருகேசன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகத்தின் பணி மேன்மேலும் தொடர எல்லா வல்ல இறைவனை வேண்டுகின்றேன்.

வாழ்க வையகம்! வாழ்க வளமுடன்!!

**- V. கணேசன், தலைவர் அ.வ.ந. சங்கம் V. புதூர்**

**வாசகர் குரல் : 155 - 1**

அருவியூர் நகரத்தார் குரல் செப்டம்பர் 2021 இதழில் செம்பூதியில் பிறந்து சென்னை & திருச்சியில் படித்து பின்பு செங்கல்பட்டு அரசு சட்டக்கல்லூரியிலும் ஐந்தாண்டு சட்டப் படிப்பனை படித்து தற்போது திருச்சி மாநகரில் வழக்கறிஞராக பணி செய்துவரும் செல்வி சிவஸ்ரீ அபிஷேகா அவர்களுக்கு எனது வாழ்த்துக்கள். நம் சமுதாயத்தில்-நம்மவரில் பெண் ஒருவர் வக்கீலாக வந்து உள்ளது நமக்கெல்லாம் மிகவும் பெருமையாகவும், மகிழ்ச்சியாகவும் உள்ளது. அவர் மென்மேலும் வளர வாழ்த்துக்கள்.

மேலும் எனது இனிய நண்பர் பொன்னமராவதி PL.A. ஜுவல்லர்ஸ் திரு. Ln. நா. பழனியப்பன் அவர்களின் மகன் செல்வன் பழ. சூர்யநாராயணன் அவர்கள் 10 மற்றும் 12-ஆம் வகுப்புகளில் நம் சமூகத்திலேயே முதலிடம் மற்றும் மாவட்ட அளவில் முதல் இடமும் பெற்று பல பதக்கங்களையும் பெற்றது குறித்து மிக்க மகிழ்ச்சி. அவரும் மேலும் B.Com., மற்றும் C.A. படிப்பிலும் வெற்றிபெற்று தமிழகத்திலேயே முதல் இடம் பெற எனது வாழ்த்துக்கள்.

**திரு. A.T. முத்துக்குமார், பொன்னமராவதி**

**வாசகர் குரல் : 155-2**

அருவியூர் நகரத்தார் குரல் செப்டம்பர் 2021 இதழில் பள்ளியில் சாதனை படைத்த செல்வன் பழ. சூர்யநாராயணன் 10 மற்றும் 12-ஆம் வகுப்புகளில் நம் சமூகத்திலேயே முதலிடமும். அவர் படித்த பள்ளியிலேயும் மாவட்ட அளவில் முதல் இடத்தில் தேர்ச்சி பெற்று பற்பல பதக்கங்களையும் பெற்றது அறிந்து அளவற்ற மகிழ்ச்சி அடைந்தேன். அவர் மேலும் B.Com., மற்றும் C.A. படிப்பிலும் வெற்றி வாகை சூட எனது நல்வாழ்த்துகள்.

**- திரு. நா. சுப்பிரமணியன், பாடி, சென்னை-50**

**வாசகர் குரல் : 155-3**

அருவியூர் நகரத்தார் குரல் செப்டம்பர் 2021 இதழில், வெளியிட்டிருக்கும் "தினமும் கங்கையில் குளிக்க" தகவல் அருமை...! மிகவும் அற்புத அருமை! முத்தான கருத்துக்கள்! மனதில் பதிவான மணியான ஆன்மீக தகவல்கள்!! மேலும்





சென்னை திருமதி. ஆனந்த செல்வம் அவர்கள், இந்த கொரோனா பெருந்தொற்று காலத்தில் பள்ளி செல்லும் குழந்தைகளின் நலன் கருதி வழங்கிய ஆலோசனைகள் அனைத்தும் மிகவும் பயனுள்ள தகவலாகும்.

மொத்தத்தில் செப்டம்பர் 2021 இதழ் நம்மவர் அனைவருக்கும் தங்கமலர்கள் நிறைந்த பொக்கிஷ தகவல்கள் அடங்கிய அஷ்சய பாத்திரம். மனம் மகிழ்ந்த நன்றிகள்!!

**- திரு தே. கண்ணன், பொன்னமராவதி**

**வாசகர் குரல் : 155-4**

**நம்மவரில் பெண் வழக்கறிஞர் :**

B.A.,L.L.B. சட்டப்படிப்பை முடித்து தமிழ்நாடு மற்றும் புதுச்சேரி பார்கவுன்சிலில் 25-03-2021 அன்று வழக்கறிஞராக பதிவு செய்துள்ளவரும், மூன்றாவது ஆண்டு படிப்பின்போது நீதிமன்றத்தில் பயிற்சி பெற்று 2020-ஆம் ஆண்டு சட்டப்படிப்பை நிறைவுசெய்துள்ளவருமான திருச்சி திரு நா. சரவணன் செட்டியார்-பொன்னழகு ஆச்சி இவர்களின் மகள் செல்வி சிவஸ்ரீ அபிஷேகா நம்மவரில் இரண்டாவதாக பெண்மணி வழக்கறிஞராக பணி செய்வது, மிகவும் மகிழ்ச்சி அளிப்பதோடு நமது சமூகத்திற்கு பெருமையைத் தேடித் தந்துள்ளார்கள். இவரைப் பாராட்டுவதோடு, வாழ்க பல்லாண்டு! என வாழ்த்துகிறேன்.

**குரல் ஆசிரியருக்கு பாராட்டு :**

நகரத்தார் குரல் ஆசிரியர் திரு. சுப. செல்வம் அவர்கள் ஆன்மிகத்திலும் சரி, உடல்நலம் பற்றியும் நல்ல தெளிவாக எடுத்துரைக்கிறார். இவரைப் பாராட்டுகிறேன்.

மேலும் மனித வாழ்க்கையில் மிகவும் இன்றியமையாதது, மிகவும் முக்கியமான மாரடைப்பு வருவதற்கு முன்பு அறிகுறிகள் எவ்வாறு, எப்படி வரும் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியமானது. தெரிந்தும் தெரியாமல் இருந்ததை தெரியும்படி செய்த சுப. செல்வம் அவர்களை மனதார வாழ்த்துகிறேன். நன்றி.

**- திரு. P. சிவன்ஜோதி, தஞ்சை.**

**வாசகர் குரல் : 155 - 5**

பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு திருமண வயதில் வரன்பார்த்து முடிவாகும்போது தம்பதிகளின் உடல்கூறுவில் சிறுநீரகம்-இதயக் கோளாறுகள், மனக் கோளாறு இருந்து வைத்தியம் பார்த்து இருந்தால் விபரம் சொல்லி திருமணம் நடந்தால் நல்லது. மூடி மறைத்து வெறும் குடும்பக் கௌரவத்திற்கு மணம் முடிக்கும்போது தம்பதிகளின் தாம்பத்தியம் உறவுகளில் விரிசல் ஏற்பட்டு வாழ்க்கை பாழாகிறது. கண்கள் இருந்தும் குருடனாய் காதுகள் இருந்தும் செவிடனாய் வாய் இருந்தும் ஊமையாய் வாழ்வது எப்படியோ அப்படி இளந்தம்பதிகள் கஷ்டப்பட வேண்டியிருக்கும். இம்மாதிரி பிரச்சனைகளை திருமண தகவல் மையம் நிர்வாகிகள் கலந்துரையாடலின்போது என செவியிலும் கேட்க உணர்ந்தேன்.

இதேபோல் நம் குரலில் செப்டம்பர் 2021 பக்கம் 54-இல் வாசகர் திரு. A. முருகன் அவர்கள் எழுதியுள்ளது சமூக சிந்தனையை உணர வைக்கிறது. அவரது சமூக சிந்தனைக்கு நன்றி கூறுவதுடன் வெளியிட்ட குரல் ஆசிரியர் அவர்களுக்கும் நன்றி கூறுகிறேன்.

நம்மவர்கள் பிள்ளைகளுக்காக இம்மாதிரி சமூகச் சிந்தனையை எழுதி தெரியப்படுத்தினால் தம்பதிகளின் வாழ்க்கை அழகிய ரோஜா மலர் போல் என்றும் மலரும் என்பதில் ஐயமில்லை. **- திரு. பிஎல்.ஆர், கோவை.**

**சிந்தனைக்கு : யானையும் எறும்புமாய் வாழ்க்கை**

**யானைக்கு கரும்பு தோட்டம் தேவைப்படுகிறது.**
**எறும்புக்கு சக்கையே போதுமானதாக இருக்கிறது.**
**தோட்டம் கிடைக்கும்பொழுது யானையாக இரு.**
**சக்கை கிடைக்கும்போது எறும்பாக இரு.**
**வாழ்க்கையில் திருப்தி இல்லை என்ற பேச்சுக்கே இடமிருக்காது.**

- குரல் ஆசிரியர்

உ

சிவமயம்

யாவர்க்குமாம் இறைவர்க்கு ஒரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போது ஒருகைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே.

# அரசு மெடிக்கல்ஸ்

**வெள்ளி விழா கண்ட நிறுவனம்**

**எல்லாவிதமான இங்கிலீஷ் மருந்துகளும் கிடைக்கும்**




**பஸ் ஸ்டாண்டு அருகில், பொன்னமராவதி. போன் : 260657**

---

உ

ஸ்ரீ பொன்னழகி அம்மன் துணை

# சினேகா பியூட்டி பார்லர்



மணப்பெண் அலங்காரம் தேவையான நகைகள்
அணிவித்து சிறந்த முறையில் செய்து தரப்படும்.
நகை செட் வாடகைக்கு விடப்படும்



48/B, கணபதி நகர்,
பிள்ளையார் தெரு
அரியமங்களம்,
திருச்சி - 620 010
Cell :99942 89723 & 63859 18499

# வாழ்நாள் முழுவதற்குமான வாழ்க்கை துணை யார்?



ஒருவருடைய வாழ்நாள் முழுவதும் கூட வருகின்ற துணை யார்?.... அம்மாவா?... அப்பாவா?... மனைவியா?... கணவனா?... மகளா?... மகனா?... உறவினர்களா?... நண்பர்களா?... இவர்களில் ஒருவரும் நமது வாழ்நாள் முழுவதும் கூட வரப்போவது இல்லை... உங்களின் உண்மையான வாழ்க்கைத் துணை அவரவர் ஆன்மா மட்டுமே.

தன்னுடைய உடம்பு செயல்படுவதை நிறுத்திவிட்டால் யாரும் இருக்கப் போவதில்லை. பிறப்பிலிருந்து இறப்பு வரை ஆன்மாவுடன் கூட இருக்கப்போவது உடம்பு மட்டும்தான். உடம்புக்காக ஆன்மாவிற்காக எவ்வளவு பொறுப்புணர்வுடன் நாம் இருக்கிறோமோ அந்த அளவே நம்மை பேணிக் காக்கும். நாம் என்ன உண்கிறோம், என்ன உடற்பயிற்சி செய்கிறோம், எந்த அளவுக்கு உடலுக்கு ஓய்வு தருகிறோம், மன அழுத்தத்தை எவ்வாறு கையாளுகிறோம், ஆன்மாவை எவ்வாறு பேணிக் காக்கிறோம் என்பதையெல்லாம் பொறுத்துதான் ஆன்மாவும் உடம்பும் நம்மை வாழ்நாள் முழுவதும் நோயின்றி பேணிக்காக்கும்.

உடம்பும், ஆன்மாவும் மட்டும்தான் வாழும்காலம் வரையிலான நிலையான விலாசம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். உங்களைத் தவிர வெளி ஆட்கள் வேறு யாரும் உங்கள் உடம்பிற்கு பாதுகாப்பாக இருக்க முடியாது. எப்படியென்றால் உங்கள் நுரையீரல்களுக்கு மூச்சுப் பயிற்சியும், மனதிற்கு தியானப் பயிற்சியும், முழு உடம்பிற்கு யோகாசன பயிற்சியும், ஜீரண உறுப்புகளுக்கு சிறந்த உணவையும், ஆன்மாவிற்கு நல்ல எண்ணங்களையும் தந்து வாழ்ந்து வருதல் சிறப்பாகும். மேலும் தமது சுயநலமற்ற நற்செயல்களால் உலகிற்கு-ஊருக்கு நலம் ஓங்கிடுமாறு உழைத்திடல் நல்ல யோகமாகும்.

எனவே வாழ்நாள் முழுவதும் கூட இருக்கும் இந்த உடம்பை அதன் செயல்பாடுகளில் உதவியாக இருந்து ஆன்மாவையும் பேணிக்காக்க சிந்தித்து செயலாற்றுவோம்.

**- சுப. செல்வம், குரல் ஆசிரியர்**

# எது அழகு?

அழகானவர்களை நாம் அனைவரும் ரசிக்கிறோம். அழகாக இருக்க நாம் ஆசைப்படுகிறோம். அழகாக இல்லையெனும் ஒற்றைக் காரணத்துக்காக பலரை ஒதுக்குகிறோம். அழகு என்று நம்மை பிறர் ஏற்காவிடில் மனம் வாடிவிடுகிறோம் அல்லவா?

அப்படியென்றால் எது அழகு? சிவந்த நிறமா? கூறான மூக்கா? வேல்போன்ற விழிகளா? வனப்பான உடல் அமைப்பா? வண்ண வண்ண உடைகளா? விதவிதமான சிகை அலங்காரங்களா? விலை உயர்வான நகை அலங்காரங்களா? இவைகளெல்லாம் அழகுதான். ஆனால், இவைகள் மட்டுமே அழகல்ல.

- குழந்தைகளை அன்போடும், பண்போடும் அரவணைத்து வளர்க்கும் பெற்றோர்கள் அழகு.
- அப்பெற்றோர்களை வயதான காலத்தில் பேணிக்காக்கும் பிள்ளைகள் அழகு.
- மனைவியை மட்டம் தட்டாத கணவன் அழகு.
- பெண்களை கண்ணியமாக நடத்தும் ஆண்கள் அழகு.
- நிமிர்ந்த நன்னடை, நேர் கொண்ட பார்வையுடன் கண்ணியம் காக்கும் பெண்கள் அழகு.
- செய்யும் தொழிலை திறமையுடன் செய்பவர்கள் அழகு.
- தொழிலில் அறத்தையும் நேர்மையையும் இரு கண்களாகப் போற்றுபவர்கள் அழகு.
- கையூட்டு வாங்காத கைகளுக்குச் சொந்தக்காரர்கள் அழகு. பிறர் மனம் புண்படாமல் பேசுபவர்கள் அழகு.
- பிறரை ஊக்கப்படுத்தும் சொற்களை தெரிவிப்போர் அழகு.
- சாலைகளில் விபத்து நேராவண்ணம் பொறுப்புடன் வண்டி ஓட்டுபவர்கள் அழகு.
- பிறர் துன்பம் கண்டால் கலங்கும் கண்கள் அழகு.
- அத்துன்பத்தைக் களைந்திட விரையும் கரங்கள் அழகு.
- சமுதாய மேம்பாட்டிற்கு உழைக்கும் மனிதர்களே அழகு.
- பணிவாக இருக்கும் பண்பாளர்கள் யாவரும் அழகு.
- மலர்ந்த முகமும், இனிய சொல்லும் கொண்ட மாந்தர்கள் எப்போதும் அழகு.
- இதன்படி வாழும் மாந்தர்களா நீங்கள்? அப்படி வாழ்ந்தால் நீங்கள்தான் உண்மையிலே அழகு.

**- சுப. ராஜகோபால், நங்கநல்லூர், சென்னை-61**



பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்
- திருவள்ளுவம்

## நல்வாழ்த்துகளுடன்...

**DEEPA ERECTORS PRIVATE LIMITED**
No. 16/5, 1st Main Road, Ramakrishna Nagar,
Ernavoor, Chennai - 600057
mail to : depl@depltd.in

**PHOENIX OILFIELD SERVICES & CONTRACTING LLC**
P.O. BOX: 1151, WADI KABIR P.C. 117,
Sultanate of Oman.

*Specialists in :*

**Construction of Storage Tanks, Pressure Vessels, Pipelines and Blasting & Painting in India & Overseas**







R. Paramasivam B.E.,
***Managing Director***
Ph.: 9884660379

Pa. Mathivanan B.E.,
***Chief Executive Officer***
& A. Nivetha B.E., M.B.A.,
***Business Analyst***

Pa. Shankar B.E., M.S., (Sweden)
***Consultant***

# முதலாம் ஆண்டு நினைவு அஞ்ச

தோற்றம்:
**26-10-1963**

மறைவு:
**20-11-2020**



## தெய்வத்திரு R. செந்தாமரை ஆச்சி

பூர்வீகம்: கட்டுக்குடிபட்டி     இருப்பு: கல்வீரம்பாளையம்

அல் என்றால் சந்திரனோடு தாமரை என்றால் சூரியனோடு (இரவி)
இறைவன் அன்றே எழுதி வைத்தானே
இருவரையும் ஒன்றாய் இணைய வைத்தானே (5.11.1984)
சத்தியமாக எத்தனை பிறவி சேர்ந்து வாழ்வோம்
யார் அறிவாரோ நாம் அறிவோம்!
மன்னவனே என்றும் உன்னோடு என கூறிச் சென்றாய் இன்றோ!

என்றும் நினைவுகளுடன்...
கணவர் **க. இரவிசந்திரன்**
**G. பாக்யலெட்சுமி, K. கோபிநாத்**
பேரன் **G. ஹரிஹரன், M. ரோஜா மாதவன்**
**M. நாகராஜ்** B.Sc. I.T., கல்வீரம்பாளையம்

நீங்கா நினைவுகளுடன்...
**சிவ. கமலம் ஆச்சி**, கட்டுக்குடிபட்டி
**சிவ. மயிலேசன்-சாந்தி** குடும்பத்தினர்
**மா. தாமரைச்செல்வன்** C.Tech., – **ஜெய்சூர்யா .MS**
ஒண்டிபுதூர், கோவை-16

# 22-ஆம் ஆண்டு நினைவு அஞ்சலி



**தெய்வத்திரு. சொ. பழனிக்குமார் செட்டியார்**
ஆலவயல்
நினைவு நாள்: **21-11-1999**

**என்றும் நீங்கா நினைவுகளுடன் :**

**மகன் : R. சக்திவேல் – மாலா** (பணபாக்கூருடையார்)

**Sri Palani Leather Company, Chrompet**

**பேரன்: ச. பழனியப்பன்** B.E. – ப. **ரேவதி** B.E.

**Asst. Manager, Renault Nissan Technology Business Centre**

**பேத்தி : ச. தீபிகா** B.E. **கொள்ளு பேரன்: ப. முகிலன்**

குரோம்பேட்டை. சென்னை-600 044. செல்: 98841 87522



# நான்காம் ஆண்டு நினைவு அஞ்சலி



**தோற்றம்**
**17-03-1969**

**மறைவு**
**30-10-2017**

**தெய்வத்திருமதி. S. பானு திருபுவனம்**

நீ உயிராலும், உடலாலும்
மண்ணுலகை விட்டு
விண்ணுலகம் சென்றாலும்
உனது நினைவலைகள்
எப்பொழும் எங்கள் நெஞ்சங்களில்
அலை மோதிக் கொண்டேயிருக்கும்!!

## என்றென்றும் நீங்கா அன்புடன்

| | | |
|---|---|---|
| **கணவர்** | : | திரு. S. சாமிநாதன் |
| **தாயார்** | : | திருமதி. N. சத்யா ஆச்சி |
| **அண்ணன்** | : | திரு. N.N. சாமி |
| **அண்ணி** | : | திருமதி. N. அன்னம்மா |
| | | N. சாய்ரமணா, N. சாய் மீனாள் |
| **தம்பி** | : | N. அன்பு - திருமதி A. ராஜேஸ்வரி, |
| | | A. கண்மணி, A. சாய்நந்தினி |
| | | திருபுவனம். |

# சிவபாதம் சேர்ந்தார்கள்

வருமுறைப் பிறவி வெள்ளம், வரம்பு காணாது அழுந்தி
உரு எனும் துயரக் கூட்டில், உணர்வின்றி மயங்குவார்கள்
ஒரு மனதுடன் சேவித்து, முன்செலும் சிறப்பினாலே
மருவிய பிறவி நீங்க, மன்னு சிவசோதியில் புகுந்தார்.

தங்களது உறவுகளை இழந்து தவிக்கும் குடும்பத்தினருக்கு ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கின்றோம். - குரல் நிர்வாகம்



வார்பட்டு திரு. சுந்தரமருதையா செட்டியார் மகனும் அன்னபூரணி ஆச்சி கணவருமான திரு. S. **அருணகிரிநாதர்** (வயது 71) 18-09-2021 சனிக்கிழமை அன்று கோவையில் இறைவனடி சேர்ந்தார்கள்.

**தகவல்: திரு S. திருமாறன், K. புதுப்பட்டி**



பூர்வீகம் புதூர்-சென்னை நங்கநல்லூரில் வசிக்கும் அரசு வாகீசன், ஹேமதிலகா, கிருஷ்ண ஜோதி இவர்களின் தகப்பனார் **திரு. பழ. மணிவாசகம்** செட்டியார் அவர்கள் 23-09-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

**தகவல்: திரு. அரசு வாகீசன், 90802 98090, நங்கநல்லூர்.**



கோவையில் வசிக்கும் திரு. தண்டபாணி, திருமதி. சித்ரா, திருமதி. ஜெயா, பொன்னமராவதியைச் சேர்ந்த திருமதி. ரோஜா இவர்களின் தந்தையார் பொன்னமராவதி **திரு. மாணிக்கம்** செட்டியார் அவர்கள் 25.09.2021 அன்று கோவையில் இறைவனடி சேர்ந்தார்கள்.

**தகவல்: வாட்ஸ்அப் செய்தி**


ESTD : 1991
உ
ஸ்ரீ மங்கைநாயகர் தேனம்மை சுவாமிகள் துணை
நம் நகர பெருமக்களுக்கு நல்வாழ்த்துக்கள்
Off : 0461 - 2328501
Res : 0461 - 2328502
91711 70000
SARC
ஸ்ரீ அலங்கார்
ரெக்சின் சென்டர்
Dealers in :
Rexine, Furniture and Furnishing Materials
ஒரு வருட உத்திரவாதத்துடன் தேக்கு மரக்கட்டில் - டபுள் மற்றும் மெத்தை ரூ. 15,100/- மட்டும்.
(தமிழகம் முழுவதும் டெலிவரி செய்யப்படும்).
247-C/4, Palayamkottai Road, Near Old Bus-Stand, Tuticorin-628 002.
E-mail : alankarexine@gmail.com www.tuticorinalankarrexine.com
AB
ஸ்ரீ அலங்கார் பில்டர்ஸ்
Structural Engineer ❖ Licensed Surveyor in Tuticorin City Municipal Corporation
❖ Panel Valuer in Tuticorin District Central Co.op. Bank Ltd.,
கட்டிட வரைபடம், வடிவமைப்பு, முகப்புதோற்றம்,
கட்டிட மதிப்பீடு, வரைபட அனுமதி சான்று, வாஸ்து முறைப்படி கட்டிடங்கள்
சிறந்த முறையில் செய்து தரப்படும்.
71-5, Balavinayagar Kovil Street, Upstairs Sri Alankar Rexine Centre,
Tuticorin- 628 002.
Email : tutyalankarbuilders@gmail.com www.tuticorinalankarrexine.com
நம் சமூக பணியில்....
அரு. சோம சண்முகநாதன்
S. சிவகாமி
S. சசிகுமார் B.A.,DECM.,
Er. S. பிரஹலாதன் M.E.,
பூதமங்கலமுருடையார், உலகம்பட்டி.

# காசிக்கு வீசம் – அதிகப்பலனுள்ள திருத்தலங்கள்

தமிழகத்தில் காசிக்குச் சமமான திருத்தலங்களாக கீழ்க்கண்ட 6 தலங்கள் போற்றப்படுகின்றன.

**1. திருவெண்காடு 2. திருவையாறு 3. மயிலாடுதுறை**
**4. திருவிடைமருதூர் 5. திருசாய்க்காடு 6. திருவாஞ்சியம்.**

எனினும் காசியை விட வீசம்பங்கு அதிக பலன் தரும் திருத்தலங்களாக தேவாரப்பாடல்களில் திருகுடமூக்கு என்கிற கும்பகோணமும், திருமுதுக்குன்றம் எனப்படும் விருத்தாசலமும் சிறப்பாக போற்றப்படுகின்றது.

## திருகுடமூக்கு என்கிற கும்பகோணம்

போக்குவரத்து அதிகமில்லாத கால கட்டத்தில் **பகவத் முனிவர்** என்பவர் தனது தாயாருடைய அஸ்தியை கங்கையில் கரைப்பதற்காக, ஒரு சீடரை அழைத்துக் கொண்டு புறப்பட்டார். பல இடங்களில் தங்கி இளைப்பாறி பயணம் தொடர்ந்தது. ஓரிடத்தில் தனது சீடரிடம் அஸ்தி உள்ள பையைக் கொடுத்து கீழே வைக்காமல் பார்த்துக் கொள்ளும்படி கூறிவிட்டு காலைக் கடன்களை முடிக்க சென்றுள்ளார். ஆர்வ மிகுதியால் சீடரும் அந்தப் பையில் என்ன இருக்கிறது என பார்த்தார். வஸ்திரம் கட்டியபடி ஒரு கலயமும், சில பூஜை பொருட்களும் தென்பட்டன. சீடரும் வஸ்திரத்தை அவிழ்த்துப் பார்த்தார். அதில் அன்று மலர்ந்த மலர்கள் தென்பட்டது. அப்படியே வஸ்திரத்தை கட்டி பழைய நிலையிலேயே முனிவர் அறியாத வண்ணம் வைத்து விட்டார். பயணம் தொடர்ந்தது. காசி போய் சேர்ந்து, கங்கையில் அதற்குரிய சடங்குகள் செய்த பின், அஸ்தியை கரைப்பதற்காக வஸ்திரத்தை பிரித்தார்கள்.அதில் அஸ்திக்குப் பதிலாக கருப்பு நிறத்தில் ஒரு பொருள் இருப்பதைக் கண்டு முனிவர் பெரும் அதிர்ச்சி அடைந்தார்! சீடருக்கு அதைவிட அதிர்ச்சி! உடனே சீடர் பயந்து நடுங்கிக் கொண்டே குருநாதரிடம் நடந்தவற்றை தெளிவாகக் கூறினார். குருநாதர் மேலும் வியப்புற்று வந்த வழியாகவே அஸ்தி கலயத்துடன் பயணித்தார்கள். குறிப்பிட்ட இடத்தை அடைந்ததும் சீடர் நினைவு படுத்த, குருநாதர் குறிப்பிட்ட அந்த இடத்தில் அஸ்தியைத் திறந்தபோது முன்பு சீடர் பார்த்த அதே மலர்கள் அன்று மலர்ந்தது போலவே காட்சியளித்ததைக் கண்ட முனிவர், மற்ற சடங்குகளை முடித்து அஸ்தியைக் அங்கேயே கரைத்தார். தன் தாயாரின் ஆன்மா சாந்தி பெற பிரார்த்தனை செய்தார். அந்த பெருமை வாய்ந்த இடமே

**'குடமூக்கு'. என்ற கும்பகோணம்** ஆகும். இங்குள்ள காவேரி கரையில் இன்றுவரை முனிவர் பெயரால் **"பகவத் படித்துறை"** என்றும் அவர் வழிபாடு செய்த விநாயகர் கோயில் பிற்காலத்தில் பஞ்ச மூர்த்திகளுடன் உடைய **"பகவத் விநாயகர் ஆலயம்"** என்றும் போற்றப்படுகிறது. தற்போது இக்கோயில் சங்கரமட நிர்வாகத்தில் உள்ளது. மகாமகம் சிறப்புக் கொண்ட இத்தலம் காசியை விட வீசம் பங்கு அதிக சிறப்புப் பெற்ற திருத்தலமாகும்.

## திருமுதுக்குன்றம் எனும் விருத்தாசலம்

இத்தலத்திற்கு சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பல சிறப்புகள் உள்ளன. **'விருத்தகாசி'** எனப்படும் இத்தலத்தில் உயிர் விடும் மக்களும், உயிரினங்களும் இத்தலத்தில் அருள்புரியும் **'விருத்தாம்பிகை'** எனும் இறைவி தன் முந்தானையால் விசிறி களைப்பை போக்கிட, இறைவன் திருஐந்தெழுத்து ஓதி அருள்பாலித்து, தன் வயமாக்குதலால் இத்தலம் காசியினும் வீசம் அதிகமெனக் கூறுவர். இத்தலத்தில் வாழ்வோர் காசிக்குச் செல்வதில்லை. இறந்தோரின் என்பை (எலும்பை) மணிமுத்தாறு நதியில் இட்டால் சில மாதங்களில் அவை கல்லாக மாறிவிடுகிறது. சிவபெருமான் முதலில் படைத்த மலை-பழமலை இதுவே. சுந்தரர் இத்தல இறைவனைப் பாட பன்னீராயிரம் பொன் பெற்று விநாயகரை சாட்சியாக வைத்து, மச்சம் பார்த்து, மணிமுத்தாரில் இட்டு அவற்றை திருவாரூர் கமலாயத்தில் எடுத்து மறுபடி மச்சம் பார்த்து பரவையாரிடம் அளித்தார். எனவே இவ்விரு தலங்களிலும் **மாற்றுரைத்த விநாயகர்** உள்ளார். பிரம்மா, திருமால், உமையம்மை, வசிஷ்ட முனிவர், அகத்தியர் 28 ஆகமங்கள் பூஜித்த லிங்கங்கள் தனிகோயிலாக உள்ளது. இத்தலத்து சிறப்பு மூர்த்தியாக **"பெரிய பழமலைநாதர்"** தனி சந்நிதியில் உள்ளார். இவர் மாசி மக விழாவில் மட்டும் வலம் வருவார். சந்நிதியில் ஸ்படிக லிங்கம் பெட்டகத்திலுள்ளது. ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் கலெக்டராக இருந்த 'ஹைட்' என்பவர் தன் பெயர் பொறித்த இரும்புச் சங்கிலியைத் தேர் வடமாக கொடுத்துள்ளார். மாட வீதியை வலம் வந்தாலே பழமலையை வலம் வந்ததற்கு சமம். முக்தி பேறு உண்டு. சம்பந்தர்-7, அப்பர்-1, சுந்தரர்-3, ஆக 11 திருமுறைப்பதிகங்களும், திருப்புகழும் கொண்டது இத்தலம். அன்பர்கள் இந்த இரு தலங்களையும் தரிசித்து அருள் பெற வேண்டுகிறோம்.

**- திரு. M. சக்திவேல், கும்பகோணம்**





## வாழ்க்கையில் வெற்றி அடைந்திட...

வாழ்க்கை ஒரு சவால் ... அதைச் சமாளி
வாழ்க்கை ஒரு சாகசம் ... அதில் துணிவு காட்டு
வாழ்க்கை ஒரு ஒரு சோகம் ... அதைத் துரத்தி விடு
வாழ்க்கை ஒரு கடமை ... அதை முடித்து விடு
வாழ்க்கை ஒரு விளையாட்டு ... அதில் பங்கு கொள்
வாழ்க்கை ஒரு துன்பம் ... அதை எதிர் கொள்
வாழ்க்கை ஒரு புதிர் ... அதற்கு விடை காண்
வாழ்க்கை ஒரு குழப்பம் ... அதைத் தீர்த்துவிடு
வாழ்க்கை ஒரு பாடம் ... அதைப் படித்து விடு
வாழ்க்கை ஒரு வாய்ப்பு ... அதைப் பயன்படுத்து
வாழ்க்கை ஒரு பயணம் ... அதைக் கடந்துவிடு
வாழ்க்கை ஒரு வாக்குறுதி ... அதனை நிறைவேற்று/காப்பாற்று
வாழ்க்கை ஒரு போராட்டம் ... அதனுடன் போராடு
வாழ்க்கை ஒரு காதல் ... அதனை அனுபவி
வாழ்க்கை ஒரு இலக்கு ... அதனை அடைந்துவிடு
வாழ்க்கை ஒரு வனப்பு ... அதன் புகழ்பாடு
வாழ்க்கை ஒரு தெய்வம் ... அதனைப் புரிந்து கொள்
வாழ்க்கை ஒரு பரிசு ... அதைப் பெற்றுக்கொள்

– **M.D. நிருபமா** B.E. (Chemical), **சிறுகுடி**

### சிந்தனைக்கு....

**கோபம் என்பது**
**பிறர் செய்யும் தவறுக்கு**
**உனக்கு நீயே**
**கொடுத்துக் கொள்ளும் தண்டனை.**

– **சிறுகுடி. திரு. கண்ணன்**

# ஜோசியம் என்னும் மாயை

சைவப் புலவர். சிவகுரு. **வா.நா. சுந்தரம்,** திருவையாறு

**சோதிடத்திற்கு** அடிப்படை 'வான்நூல்' இந்த ஆகாய வெளியில் பூமி, சூரியன், சந்திரன் என்பன போன்று பல கிரகங்கள் சிறியதும், பெரியதுமாய் பூமிக்கு மிக அருகிலிருந்து மிகத் தொலைவு வரை அமைந்து பல்வேறு தனித்தன்மைகளுடன் இயங்கிக் கொண்டிருக்கின்றன. இவைகளின் இயக்கங்கள் பூமியை நெருங்கி வரும் போதும், நெருக்கத்திலிருந்து விலகும்போதும், பூமியில் பல்வேறு தாக்கங்களை ஏற்படுத்துகின்றன. இந்த உண்மையினை உணர்ந்த நம் முன்னோர்கள் பலர், இதனைக் கண்டறியும் ஆர்வத்தால்; எந்தவித நவீன வசதியும் இல்லாத காலத்திலே இந்தத் துறையில் பல்வேறு ஆராய்ச்சிகளை மேற்கொண்டு; பல நூற்றாண்டுகள் முயன்று ஆராய்ந்து கண்டு தெளிந்து உறுதிப்படுத்தியதே வானநூல் எனப்படும் கிரகங்களும் அவைகளின் நகர்வு பலன்களையும் கூறும் வான் ஆராய்ச்சி நூல் ஆகும்.

இதனைத் தொடர்ந்து கிரகணங்கள்; அமாவாசை, பௌர்ணமிகள், இவை ஏன்; எப்படி ஏற்படுகின்றன என்பதையும்; அந்தக் காலங்களில் பூமியில் ஏற்படும் விளைவுகளையும் கண்டறிந்து கூறினர். இவைகளின் தாக்கம் பூமியில் பல்வேறு மாற்றங்களை சிறிதும் பெரிதுமாய் பல விளைவுகள் ஏற்படுவதையும் கண்டறிந்து ஏட்டுச் சுவடிகளில் பதிவு செய்தனர். இதன் பயனாக, எந்த எந்த நாட்களில். எந்த எந்த நேரத்தில் இவைகள் நிகழும் என்பதையும் கூட மிகத் துல்லியமாக கணித்துக் கூறும் அளவிற்கு அவர்கள் வான் ஆராய்ச்சியில் உச்சம் தொட்டு விளங்கினர். அவர்கள் அமைத்துக் கொடுத்த பதிவுகளே வான் ஆராய்ச்சி நூலாகும்.

மனிதனுக்கு இயல்பாகவே ஒரு குணம் உண்டு. எதைப் பார்த்தாலும், எதைக் கண்டறிந்தாலும் அதை தனக்காகப் பயன்படுத்திக் கொள்ள முடியுமா? என்று முயன்று பார்ப்பது

வழக்கம். பாய்ந்து ஓடும் வெள்ளத்தைத் தேக்கிப் பாய்ச்சி மின்சாரம் தயாரிக்கவும், காற்றின் ஆற்றலைப் பயன்படுத்தி படகு, கப்பல் முதலியவைகளை இயக்கவும் என மனிதன் தனது ஆய்வுகளை தனக்காக பயன்படுத்த பழகியவன். இந்தப் பழக்கத்தின் காரணமாக பூமியில் தாக்கத்தை ஏற்படுத்தும் கிரகங்கள், பூமியில் வாழும் மனிதனின் உடலிலும், உள்ளத்திலும் ஏதேனும் விளைவுகளைச் செய்யக்கூடும் என்ற சிந்தனையில் விளைந்த ஒரு ஆராய்ச்சியே, சோதிடத்திற்கான அடிப்படை. எந்த எந்த கிரகங்கள் எப்படி எப்படி நகரும். எந்த நாளில் எங்கு இருக்கும் என்று கூறும் அளவிற்கு 'வான் ஆராய்ச்சி'யில் உச்சம் தொட்டுவிட்டதால் ஏற்பட்ட சிந்தனையே 'சோதிட ஆராய்ச்சி' என்றாலும் கூட இயற்கை ஒரே நியதியில் மாற்றமே இன்றி இயங்கும் என்று உறுதியாக, நிச்சயமாக சொல்ல முடியாது என்பதையும்; அவைகள் தன் நிலையை, போக்கை எப்படி வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் நிலைமாறிச் செயல்படவும் கூடும் என்பதை மறந்துவிட்டு, அல்ல அல்ல மறைத்து விட்டு காசுக்காவும், பெருமைக்காகவும் தன் புகழுக்காகவும் ஆருடம் சொல்லும் பலரால் சோதிடம் நம்பகத்தன்மையை இழந்துவிட்டது. **பொது நன்மைக்காக கண்டறிந்த வான் ஆராய்ச்சியை தன் சுயநலத்திற்காகவும், தன் வாழ்வின் ரகசியத்தை அறிந்து கொள்வதற்கும் பயன்படுத்தி– பரீட்சித்துப் பார்த்து தோற்றுப்போன கலையே சோதிடம்.** மேலும் இது அத்தனையும் மீறிய ஒரு இயக்கும் சக்தி, அதையே இறைவன் என்கிறோம். இந்த இயல்பை எப்போது வேண்டுமென்றாலும் புரட்டிப் போட்டு புரட்சி செய்யும் என்பதையும், எது எப்போது எப்படி நிகழும் என்பதையும் மறந்து போன மனித மனத்திற்கும் புகுந்த ஒரு மாயையே சோதிடம்.

**'சோதிடம்' என்பது ஒரு உயிர் பிறக்கும் நேரத்தில் எந்த எந்த கிரகங்கள், எந்த எந்த இடத்தில், என்ன என்ன இயக்க நிலையில் இருந்தது எனும் அடிப்படையை வைத்தும், அதன்பின் அவைகள் நகரும் பாதைகளை வைத்தும் சொல்லப்படும் ஒரு அனுமானமே ஆகும்.** இந்த அடிப்படையையே சரியாகக் கணித்து,

எழுதத் தெரியாத அல்லது எழுதாத சோதிடக் கட்டங்களைப் பார்த்துப் பலன் சொன்னால் அது எப்படி சரியாக இருக்கும். இதை சற்று விரிவாகப் பார்க்கலாம்.

நாம் நம் நாட்டில் 'சூரியன்' உதயம் ஆகும் நேரத்தின் அடிப்படையில் கிரகநிலையைக் கணிக்கிறோம். இந்தியா முழுமைக்கும் ஒரே நேரத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்காக-சமன் செய்யப்பட்ட ஒரு நேரத்தை 'இந்தியன் ஸ்டாண்டர்டு டயம்' என்ற ஒன்றைப் பின்பற்றி வருகிறோம். அதன்படி கன்யாகுமரியில் மணி 12.00 எனில் காஷ்மீர் நகரிலும் மணி 12.00 என்றே கொள்ளப்படுகிறது. ஆனால் இது உண்மையல்ல. உண்மையில் கன்யாகுமரியில் காலை 5.40-க்கு சூரிய உதயம் ஆகுமானால் டில்லியிலும், காஷ்மீரிலும் 5.40-க்கு சூரியஉதயம் ஆகாது. காலை 6-00-க்கோ, 6.05-க்கோ டில்லியிலும், 6-15-க்கோ அல்லது அதற்கும் கூடுதலாகவோ காஷ்மீரிலும் சூரிய உதயம் நிகழும். இதுதான் அறிவியல் உண்மை. இந்தியாவில் பகல்பொழுது-வேறு வேறு நாடுகளில் இரவுப் பொழுதாய் இருப்பது போல் சூரியன் நகர்வும் இடத்திற்கு இடம் நேர வித்தியாசம் இருக்கும். ஆனால் **நாம் குழந்தை பிறக்கும் நேரத்தை சமன் செய்யப்பட்ட கடிகார நேரத்தைக் கொண்டு-எந்த ஊரில் பிறந்தாலும் அதை வைத்தே எழுதுகிறோம். இது மிகப்பெரிய அடிப்படைத் தவறு.** இந்த உண்மை தெரிந்த ஒரு சிலர் மட்டுமே. குழந்தை எந்த ஊரில் பிறந்தது என்ற கேள்வியை கேட்கின்றனர். அதன்படி ஜாதகம் கணிக்கப்பட்டுள்ளதா என சரிபார்த்து அதன்பின் பலன் சொல்கிறார்கள். உங்கள் ஜாதகம் இந்த சரியான முறையில் தான் எழுதப்பட்டுள்ளதா என்ற விவரம் எத்தனை பேருக்கு தெரியும்? இப்போது தமிழ்நாட்டில் பல வகையான பஞ்சாங்கங்கள் புழக்கத்தில் உள்ளன. பாம்பு பஞ்சாங்கம், புதுக்கோட்டை பஞ்சாங்கம், மடத்து பஞ்சாங்கம், ஆற்காட்டு பஞ்சாங்கம் இன்னும் பல உள்ளன. இவைகள்

ஒன்றுக்கு ஒன்று முரண்படுகின்றன. பஞ்சாங்கங்கள் இரண்டு வகையில் கணிக்கப்படுவதுண்டு.

**1.வாக்கியப் பஞ்சாங்கம் 2. திருக்கணிதப் பஞ்சாங்கம்** இப்படி பல முரண்பாடுகளுடன் கூடிய கணக்கை ஆதாரமாகக் கொண்டு பலன் சொல்லும்போது பலன்கள் தவறாகப் போவதற்கு நிறைய வாய்ப்புகள் உள்ளது. தலைமுறை, தலைமுறையாகத் தன் பாட்டன் முப்பாட்டன் காட்டிய வழியே சரியென்று, சுய ஆராய்ச்சி ஏதும் செய்யாமல், பிடிவாதமாய் ஒரே பாணியில் 'பஞ்சாங்கம்' எழுதும் இவர்களால் **ஜாதகனின் பலன்கள் ஒவ்வொருவர் பார்வையிலும் வேறுவேறாய் சொல்லப்படுகின்றன.**

பெங்களூரில் பிறந்த ஒருவருக்கு, மடத்துப் பஞ்சாங்கப்படி தஞ்சாவூர் ஜோதிடரால் கிரகநிலைகளை அமைத்து எழுதப்பட்ட ஜாதகத்தையும்; திருநெல்வேலியில் பிறந்த ஒரு பெண்ணுக்குப் பாம்பு பஞ்சாங்கத்துப்படி எழுதப்பட்ட ஜாதகத்தையும்; பொருத்தம் பார்த்து இணைக்க பொன்னமராவதியில் ஒரு சோதிடர் புதுக்கோட்டை பஞ்சாங்கத்தை வைத்துக்கொண்டு, பொருத்தம் பார்ப்பாராயின் அது எந்த அளவுக்கு சரியானதாக இருக்கும் எனச் சிந்தித்துப் பாருங்கள். அவர் கூறும் பலன்கள் எந்த அளவுக்கு சரி என்பதை உணராமல் செயல்படுவது எவ்வளவு பேதமை; அறியாமை. முதலில் இரண்டு ஜாதகங்களும் பிறந்த நேரப்படி சரியானதுதானா எனச் சரிபார்க்க வேண்டும். யாரும் பார்ப்பதில்லை ஏன்? ஜாதகம் பார்க்கும் பலருக்கு ஜாதகம் எழுதத்தெரியாது. பலரும் நான் கிரகங்களைக் கட்டத்தில் அடைக்கும் பாவத்தைச் செய்வதில்லை என்று மழுப்புகிறார்கள். உண்மையில் சோதிடக் கலையில் நல்ல தேர்ச்சியும், அறிவும், அனுபவமும் உள்ளவர் என்று தற்காலத்தில் யாரும் இல்லை. புற்றீசல் போல் கிளம்பி உள்ள ஜாதகப் புத்தகங்களைப் படித்து வைத்துக் கொண்டும், கணணியை பார்த்தும் பலன் சொல்வது வழக்கமாகி விட்டது.

காசுக்காகவும், காரியம் சாதிப்பதற்காகவும் பலன் சொல்வதே இப்போது நடைபெற்று வருகிறது. மனிதன் தான் நினைத்தபடி ஆசைப்பட்டபடி சாதகமாக யார் சொல்வார்கள் எனத் தேடித் திரிகிறான். அதனால் ஒரே ஜாதகத்தை தூக்கி கொண்டு

பலரிடம் ஓடுகிறான். குண இயல்பு அறிந்த எவனோ ஒரு சோதிடன், அவன் மனம் போலப் பேசி காசு பார்க்க, அவன் கெட்டிக்காரச் சோதிடன் எனப் பேர் பெற்றுக் கொள்கிறான். காசுடன் பேரும் கிடைக்கிறது.

பொதுவாக 'செவ்வாய் தோஷம்' என்பதை ஒரு விதியின் (Rule) அடிப்படையில் மட்டுமே பலரும் பார்க்கிறார்கள். ஆனால் அதற்கு பல விதிவிலக்குகள் சொல்லப்பட்டுள்ளது என்பதே பலருக்குத் தெரியவே இல்லை. மேலும் ஒரு சிலர், அது என்ன விதிவிலக்கு, செவ்வாய் இருக்கு என்றால் 'இருக்குதான்' என்று முரட்டுப்பிடியாய்ப் பேசுகிறார்கள். இது போல எல்லா கிரக நிலைக்கும் அவரவர் கற்றுக்கொண்ட அளவிலேயே நின்று காலம் முழுவதும் பலன் சொல்கிறார்கள். புதிய அனுபவங்கள், புதிய சிந்தனைகள், ஆராய்ச்சிகளுக்கு இடமின்றி காலம் காலமாய் ஒரே மாதிரியே ஆயுள் முழுக்கவும், ஒரே மாதிரி பலன்கள் கூறுவதே பெரும்பான்மையாக இருக்கிறது. இப்படிப்பட்ட சோதிடர்களால் மிக அருமையான, அற்புதமான வானநூல், பிழை மலிந்ததாக நம்பகத்தன்மை அற்றதாக கருதவேண்டிய நிலைக்குத் தாழ்ந்து விட்டது.

எனக்கு மிக நெருக்கமான ஒரு நண்பர், இவர் ஒரு குறிப்பிட்ட சோதிடரைக் கலக்காமல் தன் வாழ்வில் எதுவும் செய்வதில்லை என வாழ்ந்து வந்தார். இவரின் யோசனைப்படி ஒரு நண்பர் இந்த சோதிடரிடம் ஒரு ஆலோசனை பெற்று, தன் வாழ்வில் அதை மேற்கொண்டார். அந்த நிகழ்வு மிகப்பெரிய துயரமாக மாறியதோடு, 25 ஆண்டுகள் கடந்தும் அந்தப் பாதிப்பிலிருந்து வெளிவர வழியின்றி அவர் துயருருகின்றார். சோதிடர் ஏதும் கூற இயலவில்லை. ஒரு செய்தி, பிறருக்கு சோதிடம் சொல்லும் எந்த ஒரு சோதிடரும் துன்பம், துயரம், இழப்பு, நோய் இல்லாமல் வாழ்கின்றார்களா? வருமுன்போ வந்த பின்போ அதை மாற்றிக் கொள்ள முடியாமல், நம்மைப் போலவே துயருரும் அவர்களைப் பார்த்தும், இவர்களின் சோதிடத்தை நம்பிப் பார்ப்பவர்கள் அறிவற்றவர்களா? எத்தனை நடந்தும் தான் சொல்வது நடக்கும் எனப் பலன் சொல்பவர்கள் அறிவற்றவர்களா?





ஒரு பொதுவான இயற்கை அமைப்பில் உள்ள கிரகங்களின் அசைவை-அமைப்பை வைத்துக் கொண்டு; மிக நுண்ணிய, இன்ப துன்ப வலையில் சிக்கித் தவிக்கும், ஐம்புலன்களால் ஆட்டுவிக்கப்படும் உலகியலில் உழலும் மனித வாழ்வுக்கு-ஆசையில் அலைக்கழிக்கப்படுவனுக்கு மிக நுண்ணிய வாழ்வியல் கூறுக்குச் சரியாக இருக்கும் என்று நம்பி சோதிடம் சார்ந்து-அது காட்டும் வழியில் நடப்பது என்பது, மிக மிக பைத்தியக்காரத்தனம் ஆகும்.

நிறைவாக ஒவ்வொருவரும் உங்கள் நெஞ்சில் கை வைத்துச் சொல்லுங்கள் உங்களைச் சுற்றி தங்களின் உறவுகளில் நிகழ்ந்தவைகளை நினைவு கூறுங்கள். நல்ல பொருத்தம் என்று சோதிடம் பார்த்து திருமணமானவர்கள் பிரச்சனையில்லாமல் வாழ்கிறார்களா? இல்லை சோதிடம் சொன்னவர் வாழ்வில் ஏற்ற இறக்கம் இல்லாமல் வாழ்கிறாரா? அப்படி ஏதும் இல்லையல்லவா? பின் ஏன் இந்த மயக்கம். அவர் பார்த்தார், இவர் பார்த்தார், நானும் பார்க்கிறேன் என்று சோதிடத்தை மட்டுமே நம்பி இரு இளம் உள்ளங்களில் வருத்தம் உண்டாக்குவது சரியா சிந்தியுங்கள்.

குறிப்பாக இரண்டு குடும்பங்கள் உறவு கொள்ள விரும்பி தங்களின் வாழ்க்கைமுறை, பொருளாதாரம், கல்வி, சூழ்நிலை, உறவுமுறை ஆகியவைகளை உத்தேசித்து தங்களின் மகன் மகள் திருமணத்தை முடிவு செய்தபின் எதற்காகச் சோதிடம் பார்ப்பது? வருவதை தடுக்கவா? வராமல் காக்கவா? **எதுவும் நம் கையில் இல்லை என்பதை தம் வாழ்வில் பலமுறை அனுபவித்து அறிந்த பின்னும், பெரியோர்கள் ஜாதகம் என அலைவது விசித்திரமாயிருக்கிறது.** சுத்த பத்தாம்பசலித்தனமாக இருக்கிறது. மிகத்தேர்ந்த அறிவோ, ஆராய்ச்சியோ இல்லாமல், யார் யாரோ எழுதிய புத்தகங்களை படித்துவிட்டு காசுக்காக சோதிடம் சொல்லும் இக்கால சோதிடர்களை நம்பி, உங்கள் வாழ்வைத் திட்டமிடுவது எந்தவிதத்தில் நியாயம். இதைப் போல ஒரு மோசமான செயல் ஏதும் இல்லை. எனவே சிந்தித்து செயலாற்றுங்கள்.

நாம் விரும்பும் நாளில், குறித்த நேரத்தில் ஒரு பிள்ளையைப் பெற்றெடுக்கும் சூழல் வந்துவிட்ட நாளில், இந்த சோதிடம் என்ன செய்யப்போகிறது என்பது ஒரு புரியாத புதிராக உள்ளது.

மனிதன் இந்தப் பூமியில் வந்து விழுந்த நிமிடம் முதல், மண்ணில் மறையும் நிமிடம் வரை; அவன்/அவள் வாழ்வின் ஒவ்வொரு நிகழ்வும், முன்னமே நிர்ணயிக்கப்பட்டுவிடுகிறது. இதை மாற்றவோ, கூட்டவோ, குறைக்கவோ எவராலும், எதாலும் முடியாது. அவை என்ன, என்ன; எப்படி நிகழும், எப்போது நிகழும் என்பதையும் யாரும் அறிந்து கொள்ள முடியாது. இந்த ஒன்றுதான் மனிதனை தன்னை விஞ்சிய சக்தி ஒன்று இருக்கிறது என்பதை அவ்வப்போது உணர வைத்து, அவனை மனிதனாக வாழ வைத்துக் கொண்டிருக்கிறது. இவைகளை அறிந்து கொள்ளவும், மாற்றிக்கொள்ளவும் முடியுமானால் மனிதன் மனிதனாக வாழ மாட்டான் என்பதை தயவுசெய்து புரிந்து கொள்ளுங்கள்.

இதற்குப்பின்னும் சோதிடத்தை நம்புவதும்-நம்பாததும் உங்கள் விருப்பம். அவன் அன்றி அனுவும் அசையாது. அதைத்தான் நம்புவேன் என்றிருப்பதும்-அவன் உமக்கு அளித்தது என்பதே என் கருத்து.

திருச்சிற்றம்பலம்

**ஆசிரியர் குறிப்பு : இது குறித்து வாசகர்களின் அறிவார்ந்த கருத்துக்கள் வரவேற்கப்படுகிறது.**

## திருமலைக்கேணி ஸ்ரீலஸ்ரீ குழந்தைசாமி ஐயா குருபூஜை



திண்டுக்கல் அருகிலுள்ள திருமலைக்கேணி ஸ்ரீலஸ்ரீ குழந்தைசாமி ஐயா அவர்களின் 51-ஆம் ஆண்டு குருபூசை 03-09-2021 அன்று சிறப்பாக நடைபெற்றது. சுவாமிகளுக்கு சிங்கம்புணரி திரு மு.பாலகிருஷ்ணன் - பானுமதி தம்பதியரின் தலைமையில் அபிஷேக அலங்காரமும் பக்தர்களுக்கு அன்னதானமும் சிறப்பாக நடைபெற்றது.

விழாவில் நகரத்தார்கள் மற்றும் கிராம பொதுமக்கள் அனைவரும் கலந்துகொண்டு ஐயாவின் அருள் பெற்றார்கள்.

**- தகவல்: திரு. T.N. சுரேஷ் ராம், சென்னை.**




**Book Post - Printed Matter**

**To**

**From**

அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளக்ஸ் பின்புறம்,
மெயின்ரோடு ரோடு, **பொன்னமராவதி,**
புதுக்கோட்டை மாவட்டம் - 622 407.

SURYA SVK Cell : 98421 24415